4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண எம்.8798





# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 9-ஏ) மதுரை (4—11—71 வியாழன்) (மலர் 65

### செய்தி அனுப்பும் தோழர்களின் கவனத்திற்கு

ஒவ்வொரு நாளும் நீங்கள் அனுப்பும் செய்தி மறுநாள் உங்கள் கையில் கிடைக்கும் "தீக்கதி"ரில் இடம்பெற வேண்டிய முக்கியத்துமான செய்தி என்று நீங்கள் கருதினால் அவைகளைக் கீழ்வருமாறு அனுப்பிவைக்க வேண்டும்.

1 முதல் நாளே எக்ஸ்பிரஸ் தபாலில் ... நாள் காலையில் எங்களுக்குக் கிடைக்கச்செய்யவேண்டும்.

2. காலை 9 மணிக்குள் டிரங் செய்தி மூலம் தகவலை எங்களுக்குத் தெரிவிக்கலாம். டிரங் மூலம் செய்தி தருவதுதான் ஊர்ஜிதமாக மறுநாள் பத்திரிகையில் இடம் பெற்று அச்செய்தி வெளிவந்து விடும்.

ஆசிரியர்,
தீக்கதிர்.

### பிறவிக் குணம்!




இன்று 70 கோடிக்கு வரி விதித்துள்ள இந்திரா அரசு, இதை அகதிகள் பிரச்னை தீர்ந்தவுடன் ரத்து செய்து விடுவேன் என்று கூறுவதை யார் நம்புவது? மக்கள் மீதே வரி விதித்து முதலாளிகளை பாதுகாத்து வரும் இந்திரா அரசு கூறுவதை யார் நம்புவார்கள்?

# புயலினால் விளைந்த பயங்கரச் சேதம்!

ஒரிசா மாநிலத்தில் கடந்த சில தினங்களுக்கு முன் வீசிய கடுமையான புயலின் காரணமாக சுமார் 25,000 பேர் உயிர் இழந்தனர் என்றும், கடற்கரை ஓர கிராமங்களில் 10 ஆயிரம் குடும்பங்கள் (பெரும்பாலும் விவசாயிகள்) இறந்திருக்கக்கூடும் என்றும் தகவல் வந்துள்ளது.

புயல் சேதத்தால் சுமார் 40லட்சம் மக்கள் வீடுவாசல்களை இழந்து தவிக்கின்றனர்.

நவீன விஞ்ஞான சாதனங்கள் எத்தனையோ இருந்தும், மக்களைப்பற்றி அக்கறைகொள்ளாதவர்கள், புவனேஷ்வரத்திலும், டெல்லியிலும் வீற்றிருப்பதால், ஒரிசா மக்களுக்கு ஏற்பட்டுள்ள துயரத்தை தவிர்க்க முடியாது போயிற்று.

புயல் உருவாகும் உத்தேச இடம், அது கடற்கரையைத் தாண்டிச் செல்லக்கூடிய உத்தேசப்பகுதி ஆகியவற்றை அறிந்துகொள்ளும் சாதனங்கள் இன்று உண்டு.

ஏற்கனவே கிழக்குவங்கத்தில் யாகியாகான் இராணுவ ஆட்சியில் இதேபோல் புயலில் உயிரிழந்தனர்.

இந்த அனுபவத்திலிருந்து இந்திய அரசு எந்தப் படிப்பினையையும் கற்றுக்கொள்ளவில்லை. காரணம், மக்கள் நல்வாழ்வில் அக்கறையில்லாத ஆட்சியாக இருப்பதால்தான்.

செத்த பின்பு பிரேதங்களை அள்ளிப் போட்டுக்கொண்டு செல்வதற்கு இராணுவத்தை திரட்ட முன்வரும் இந்திய அரசு, முன்னமேயே, புயல் குறிகளை நவீன சாதனங்களால் அறிந்து உதவி செய்ய திருந்தது. இந்த அரசின் தன்மையை மீண்டும் ஒரு முறை மக்களுக்கு ஞாபகப் படுத்துகிறது.

காலம் கடத்தாது, துயரத்தில் சூழ்ந்துள்ள ஒரிசா மக்களுக்கு சகல உதவிகளையும் அளிக்க முன்வர வேண்டும் என்று வற்புறுத்துகிறோம்.

—சிறப்புத் தலையங்கம்

### பெரு – இந்திய வர்த்தகம்

நியூயார்க், நவ. 2—

பெரு நாட்டுக்கும் இந்தியாவுக்குமிடையே ஒரு வர்த்தக உடன்பாடு இந்த வாரம் ஏற்படும்.

லீமா நகரில் நடைபெறவிருக்கும் 77 நாடுகளின் மாநாட்டில் கலந்துகொள்ள இந்திய அன்னிய வர்த்தக மந்திரி எல். என். மிஸ்ரா போகிறார். அங்கு இந்த உடன்பாடு செய்யப்படும்.

## ஐ. நா.விற்கு சீனக் குழு

### வெளிவிவகார அமைச்சர் அறிவிப்பு

பீகிங், நவ. 3—

ஐ நா. சபையின் நடவடிக்கைகளில் பங்குகொள்ள மக்கள் சீனம் பிரதிநிதிக் குழுவை வெளியிட்டது.

சீனாவின் தற்காலிக வெளிவிவகார அமைச்சர். சீ-பெங்-பே, ஐ நா. பொதுக் காரியதரிசி ஊதாண்டுக்கு அனுப்பிய தந்தியில் தெரிவித்துள்ளார்.

பாதுகாப்புச் சபையின் கூட்டங்களில் சீனாவின் சார்பில் இன்று கனடாவில் சீனத்தின் தூதுவராக இருக்கும். ஹுவாங்-ஹுவா என்பவர் நிரந்தரப் பிரதிநிதியாக பணியாற்றுவார்.

சென்-சூ என்பவர் அவருக்கு உதவியாளராக இருப்பார்.

சியோ பொதுச் சபையில் பங்குகொள்ளும் சீனக் குழுவிற்கு தலைமை வகிப்பார்.

இவர்களல்லாமல் உதவியாளர்களாக, தாங்-மிங்-சோ திருமதி வாங்-ஹெ-துங் ஆகியோரும் உதவியாளர்களாகச் செல்கின்றனர். இவர்கள் அமெரிக்காவிற்கு வருவதற்கு நுழைவுப் பத்திரம் எதுவும் பெறவேண்டிய அவசியம் எதுவுமில்லை என்று சிறப்பு உத்தரவு ஒன்றில் அறிவித்தது.

இவர்கள் ஐ நா. வில் கலந்துகொள்ளும் தேதியை சீக்கிரமே வெளியிடப்படும் என்று சீன வெளிவிவகார அமைச்சகம் அறிவித்தது.

# இன்று கேரள மாநிலம் முழுவதும் மாணவர்கள் வேலைநிறுத்தம்!

### சட்டக் கல்லூரி மாணவர் வேலைநிறுத்தம்

சென்னை, நவ. 3—

இங்குள்ள சட்டக் கல்லூரி மாணவர்கள் நேற்று அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்.

கல்லூரி விடுதிகளில் கூடுதல் வசதிகள், மேலும் ஒரு மாணவர் பஸ், பலகலைக்கழக நிர்வாகங்களில் (செனட், சிண்டிகேட் அமைப்புகளில்) மாணவர்களுக்குப் பிரதிநிதித்துவம் முதலிய பல கோரிக்கைகளை நிறைவேற்றும்படி வற்புறுத்தவே இந்த வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டனர்.

கோரிக்கைகளை முழங்கிக் கொண்டு ஊர்வலமாக அரசுத் தலைமைச் செயலகத்துக்குச் சென்றனர்.

அங்கு சட்டஅமைச்சர் திரு மாதவனைச் சந்தித்து கோரிக்கை மனு ஒன்றை அளித்து கோரிக்கைகளை நிறைவேற்றும்படி வலியுறுத்தினர்.

### தனியார் கல்லூரி ஆசிரியர்களின் கோரிக்கைக்கு ஆதரவு

திருவனந்தபுரம், நவ. 3—

கேரளத்தில் தனியார் கல்லூரிகள் ஆசிரியர்களின் வேலைநிறுத்தம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

தனியார் கல்லூரி ஆசிரியர்களுக்கு அரசாங்கம் நேரடியாக சம்பளம் கொடுக்க முடியாதென்று முதலமைச்சர் அச்சுதமேனன் கூறி இருக்கிறார்.

இன்று கேரளத்தில் உள்ள எல்லாப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் வேலை நிறுத்தம் நடைபெறுகிறது.

சகல பள்ளிகளையும் இன்று மூடுவதற்கு அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது.

தனியார் கல்லூரி ஆசிரியர்களின் கோரிக்கைகளுக்கு ஆதரவாக இன்றுமுதல் மாநிலம் தழுவிய கிளர்ச்சி செய்வதற்கு மார்க்ஸிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியின் ஆதரவுள்ள மாணவர் சங்கமும், இந்திரா காங்கிரஸ் ஆதரவுள்ள மாணவர் சங்கமும் கூட்டாக முடிவு செய்திருக்கின்றன. இன்றைய ஒருநாள் கிளர்ச்சியில், பழைய காங்கிரஸ், கேரளா காங்கிரஸ், ஆர், எஸ். பி, சோஷலிஸ்டு கட்சி ஆகியவைகளின் ஆதரவில் உள்ள மாணவர் சங்கங்களும் கலந்து கொள்ளும்.

### சீனத்தில் தூதுவர் நியமனம்

#### டெல்லி வட்டாரங்களின் கருத்துக்கள்

புதுடெல்லி, நவ- 3

இந்தியப் பிரதமர் இந்திரா காந்தி, வெளிநாடு சுற்றுப் பயணம் முடிந்து இந்தியா திரும்பியவுடன் சீனத்துடன் முழு தூதரக உறவை ஏற்படுத்திக் கொள்வதில முக்கிய கவனம் செலுத்தப் போவதாக இங்கு கிடைத்துள்ள தகவல் கூறுகிறது. இன்றுள்ள நல்ல சூழ்நிலையில் இத்தகைய உறவை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்று, பிரதமரின் முக்கிய ஆலோசகர்கள் பிரதமருக்கு ஆலோசனை கூறுவார்களாம்.

அதே சமயத்தில் இந்த உறவு சீர்திருந்துவதும், வளருவதும், ஐ நாவில் சீனா எவ்விதம் நடந்துகொள்கிறது என்பதையும், இந்திய-பாக் விவகாரத்தில் சீனா எந்த நிலையை எடுக்கிறது என்பதையும் பொறுத்திருக்கிறது என்று டெல்லி அரசாங்க வட்டாரங்கள் கூறுகின்றன.

### குசேலரை 15 நாட்கள் காவலில் வைக்க உத்தரவு

சென்னை, நவ. 1 —

கிம்சன் தொழிற்சாலையின் முன் நடைபெற்ற தொழிலாளர் கூட்டமொன்றில் பேசியதற்காக கைது செய்யப்பட்ட குசேலர். இன்று சப்மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் ஆஜர் படுத்தப்பட்டார்.

அவரை 15 நாட்கள் காவலில் வைக்கும்படி நீதிபதி உத்திரவிட்டுள்ளார்.

### விவசாயிகள் சங்க கிளைகளுக்கும் ஊழியர்களுக்கும் முக்கிய அறிவிப்பு.

#### குத்தகை, வார பதிவு பற்றி

அன்புள்ள தோழர்களே,

ஏற்கனவே, தஞ்சை, திருச்சி, மதுரை ஆகிய மூன்று மாவட்டங்களில் மாத்திரம் அமுல் நடத்தப்பட்டுவந்த அடங்கலில் குத்தகை, வாரதார்களைப் பதிவுசெய்யும் சட்டம், தற்சமயம் மாநிலம் முழுதுமுள்ள எல்லா மாவட்டங்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டிருப்பதை அறிவீர்கள்.

எனவே, ஒவ்வொரு இடத்திலுமுள்ள விவசாயிகள் சங்கக்கிளைகள், ஊழியர்கள் இதில் விசேஷ கவனம் செலுத்தி குத்தகை வார விவசாயிகளை அடங்கலில் பதிவு செய்வதற்குத் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது,

மாவட்ட விவசாயிகள் சங்க நிர்வாகக் குழுக்கள் கிராம சங்கங்களுக்கு இதற்குத் தேவையான உதவிகளைச் செய்ய வேண்டியது-

இதுசம்மந்தப்பட்ட விவரங்கள் அடங்கிய "குத்தகைவார பதிவுச் சட்டம்" என்னும் தமிழ்ப் புத்தகம் நமது அலுவலகத்தில் இருக்கிறது, விலை 0-25 காசு, தேவையானவர்கள் முன்பணம் அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும்,

தமிழ்நாடு விவசாயிகள் சங்கம்,
மதுரை,
2—11—71

வாழ்த்துக்கள்,
தோழமையுள்ள,
ஆர். இராமராஜ்,
செயலாளர்.

## இந்திரா, சுவரண்சிங் வாழ்த்து சீனச்செய்தி நிறுவனம் வெளியிட்டது!

பீகிங் நவ 3 —

ஐ. நா. வில் சேர்த்துக் கொள்ளப்பட்டதற்காக சீனத்தை வாழ்த்தி, இந்தியப் பிரதமர் இந்திரா காந்தியும் இந்திய வெளி விவகார அமைச்சர் சுவரண் சிங்கும் அனுப்பிய செய்திகளை நவ சீனச் செய்தி நிறுவனம் வெளியிட்டது

திருமதி இந்திரா காந்தி தன் வாழ்த்துச் செய்தியில் ஆசியாவிலும் உலகமெங்கும் சமாதானமும், முன்னேற்றமும் ஏற்பட இந்தியாவும் சீனமும் நெருக்கமாக ஒத்துழைக்கும் என்று கூறியுள்ளார்.

சுவரண்சிங் தன் வாழ்த்துச் செய்தியில், ஐ நா. வின் புத்திசாலித்தனமான இந்த தீர்ப்பு. எங்கள் மாபெரும் அண்டை நாடு சமாதானத்திற்காக ஐ நா. வில் உழைக்க முன்வந்துள்ள செய்தி எமக்கு உற்சாகமளிக்கிறது

1962 இந்திய-சீன தகராறுக்குப் பிறகு, இத்தகைய வாழ்த்துச் செய்திகளை பரிமாற்றம் செய்வது— அதை வெளியிடுவது, இதுவே முதல் தடவையாகும்.

### நகரவை மின் நிறுவனங்களை ஏற்க அரசுமுடிவு

சென்னை, நவ. 3—

மதுரை, தஞ்சை, கோவை, பொள்ளாச்சி, கரூர் ஆகிய இடங்களில் உள்ள நகரசபை மின்சார நிறுவனங்களை தமிழ்நாடு அரசு ஏற்றுக் கொள்ள முடிவு செய்துள்ளது.

மின் வாரியத்தில் இதே வகையிலுள்ள தொழிலாளர்களுக்கு அளிக்கப்படும் ஊதியத்தையே இந்த நகராட்சி மின் ஊழியர்களுக்கும் வழங்க அரசு முடிவு செய்துள்ளது. நேற்று வெளியிடப்பட்ட அரசுப் பத்திரிகை குறிப்பு ஒன்றில் மேற்கண்டவாறு அறிவிக்கப் பட்டுள்ளது.

## சம்பள போர்டு சிபாரிசை அமுலாக்குக

### நகரவை மின் தொழிலாளர் சங்க பொதுச்செயலாளர் வேண்டுகோள்

மதுரை, நவ. 2—

சம்பளபோர்டு சிபாரிசுகளை அமுல் நடத்தக்கோரி தமிழ்நாடு நகரசபை மின்தொழிலாளர் சம்மேளனப்பொதுச் செயலாளர் தோழர் வி. எஸ். மணி கீழ் வரும் அறிக்கையினை விடுத்துள்ளார்:-

"மத்திய மின்சார சம்பள போர்டு, சிபாரிசுகளை 1-4-69 முதல் அமுல் நடத்த வேண்டும் என்று கூறியுள்ளதை மத்திய அரசு ஏற்றுக்கொண்டுள்ளது. இந்த சிபாரிசுகளின் அடிப்படையில் தமிழக அரசு, தமிழகத்திலுள்ள 70,000 மின்வாரியத் தொழிலாளர்களுக்கு நவம்பர் 69 முதல் சம்பளவிகிதங்களை மாற்றி நிர்ணயித்துள்ளது. ஆனால்மதுரை, கோவை, பொள்ளாச்சி, கரூர், தஞ்சை ஆகிய நகராட்சிகளில் பணிபுரியும் ஏறத்தாழ 1000 மின்சாரத் தொழிலாளர்களுக்கு மட்டும் இன்று வரை இந்த சம்பள போர்டு சிபாரிசுகளை அமுல்நடத்த தமிழக அரசு உத்திரவு பிறப்பிக்கவில்லை நகரவை மின்சார தொழிலாளர்களுக்கு மட்டும், இந்த சம்பளபோர்டு சிபாரிசுகளை அமுல் நடத்த உத்திரவு பிறப்பிக்கவில்லை.

#### எந்த நடவடிக்கையும் எடுக்காதது ஏன்?

நகரவை மின்சாரத் தொழிலாளர்களின் கிளர்ச்சிகளுக்குப் பின்னால் தமிழக அரசு நிதி இலாகா இணைச்செயலாளர் தலைமையில் ஒரு கமிட்டியை நியமித்தது. இககமிட்டி தமிழகம் முழுவதும் 6 மாத காலம் சுற்றுப்பயணம் செய்துவிட்டு தனது அறிக்கையை ஆகஸ்ட் மாதம் அரசிற்குச் சமர்ப்பித்துள்ளது. ஆனால் தமிழக அரசு இன்றுவரை இந்த அறிக்கை மீதோ சம்பள போர்டு சிபாரிசுகளை அமுல் செய்வது சம்பந்தமாகவோ எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை.

#### வேலை நிறுத்தம் செய்ய தி. மு. க. சங்கம் முடிவு

ஆகவே சம்பள போர்டு சிபாரிசுகளை அமுல் நடத்தக் கோரி ஐந்து நகராட்சிகளைச் சேர்ந்த தொழிலாளர்களும் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்துள்ளனர். மதுரையில் சி. ஐ. டி. யூ. வுடன் இணைந்துள்ள மதுரை நகரவை மின்சாரத் தொழிலாளர் சங்கமும், தி. மு. க வைச் சார்ந்த மதுரை மாநகராட்சியில் தொழிலாளர் முன்னேற்ற சங்கமும் சேர்ந்து 9—11—71 முதல் வேலை நிறுத்தம் செய்வதாக நோட்டீஸ் கொடுத்துள்ளன.

ஆகவே, தமிழக அரசு காலந்தாழ்த்தாமல் உடனடியாக சம்பளபோர்டு சிபாரிசுகளை அமுல் செய்ய உத்திரவு பிறப்பிக்கவேண்டும் என வற்புறுத்துகிறேன்.

### அமெரிக்க ஏழாவது கப்பற்படை இந்துமகா கடலில் பிரவேசிக்க முயற்சி!

#### இந்தியாவுக்கும், தெற்காசிய நாடுகளுக்கும் ஆபத்து!!

வாஷிங்டன், நவ. 3—

அமெரிக்காவின் ஏழாவது கப்பற்படையை இந்துமகா சமுத்திரத்துக்குள் அனுப்புவதற்கு அமெரிக்க கப்பற்படை திட்டமிட்டிருக்கிறது.

ஏவுகணைகளும், அணுகுண்டுகளும் பொருத்தப்பட்ட அமெரிக்க நீர்மூழ்கிக் கப்பல்கள் வங்காளக் குடாக் கடலிலும், அரபிக் கடலிலும் ஏற்கனவேயே இருந்து செயல்பட்டுக் கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது.

### தி. மு. க. வுக்குள் குடுமிப்பிடி

திருச்சி, நவ. 2—

திருச்சியில் முன்னாள் தி.மு.க. எம்.எல் ஏ., எம்.எஸ்.மணியை தலைவராகக் கொண்டு தி.மு.க. ஊழியர் கூட்டணி என்ற தொழிற்சங்கம் அமைக்கப்பட்டுள்ளது.

இந்தத் தொழிற் சங்கம் தன்னை தி மு கழகத்தின் தொழிலாளர் முற்போக்கு அணியுடன் இணைத்துக்கொள்ளும்படி கோரி இருந்தது.

இந்த கோரிக்கை பற்றி தி. மு. க. தொழிலாளர் முற்போக்கு அணியின் நிர்வாகக் குழு விவாதித்தது. எம். எஸ். மணி தலைமையில் அமைக்கப்பட்டுள்ள தொழிற்சங்கம் தி.மு க. வுக்கும், அதன் தொழிலாளர் அணிக்கும் எதிரானது என்று அந்தக் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேறியது.

## நவ.5ல் மே.வங்க தினம் கொண்டாடுக.

### தோழர் உமாநாத் அறிக்கை

மதுரை, நவ. 3—

சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழுவின் செயலாளா தோழர் ஆர். உமாநாத் பின் வரும் அறிக்கையை வெளியிட்டுள்ளார்:—

மேற்கு வங்க மாநில அரசும் மத்திய அரசும் 13 மாநில அரசு ஊழியர்களையும் 32 ஆயுதத் தொழிற்சாலை ஊழியர்களையும் விசாரணை எதுவுமின்றி வேலைநீக்கம் செய்திருப்பதை கண்டித்து நவம்பர் 5-ல் "மேற்கு வங்க தினம்" அனுஷ்டிக்குமாறு தோழர் பி. டி. ரணதிவே அறைகூவல் விட்டுள்ளதை படித்திருப்பீர்கள்.

தமிழகத்திலுள்ள எல்லா சி. ஐ. டி. யூ சங்கங்களும் முன் முயற்சி எடுத்து, மற்ற தொழிற் சங்கங்களுடனும் சேர்ந்து, இந்ததினத்தில் ஊர்வலம், ஆர்ப்பாட்டம், பொதுக்கூட்டம் ஆகியவற்றை நடத்தி, இந்த அடக்குமுறையைக் கண்டிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். பழிவாங்கப்பட்ட அரசு ஊழியர்களை மீண்டும் வேலையில் அமர்த்துமாறு கோரி தீர்மானங்கள் நிறைவேற்றி, மத்திய, மேற்கு வங்க மாநில அரசுகளுக்கு அனுப்பி வைக்க வேண்டுகிறேன்.

தீக்கதிர்

# [illegible] வரிகளை எதிர்த்துப் போராடுக!

இந்திய அரசு அக்டோபர் 22 ம் நாள் ஒரு [illegible]ய அவசரச்சட்டத்தைப் பிறப்பித்துள்ளது, இருக்கிற [illegible]ி போதாதென்று வங்க அகதிகள் பெயரில் புதிய வரி [illegible]ாத் திணிப்பதற்குத்தான்.

ஒரு ரூபாய்க்கும் அதற்கு அதிகமான இரயில் கட்டணம் செலுத்துவோர் இனி 5 சதமானம் அதிகமாகக் கொடுக்கவேண்டும்.

போஸ்ட்கார்டுகள், செய்திக் கடிதங்கள்கள் தவிர, கவர்கள், இன்லாண்டு லெட்டர், வாழ்த்துக்கள் போன்ற எல்லாவற்றிற்கும் இனி ஐந்து சதமானம் அதிகமாகக் கட்டணம் செலுத்த வேண்டும்.

15,000 இதழ்களுக்கு மேல் விற்கப்படும் நாளேடுகளுக்கும், வார, மாத இதழ்களுக்கும் புதிதாக இதழுக்கு 2 பைசா கலால் (எக்சைஸ்) வரி விதிக்கப்பட்டுள்ளது.

வணிக பில்கள், பிராம்சரி நோட்டுகள், இன்சூரன்ஸ் பாலிசிகள் போன்றவற்றிற்கும் 10 காசுகள் புதிய வரி விதித்துள்ளது

இவைகளின் மூலம் ஆண்டுக்கு ரூ. 70 கோடி அதிக வருமானமும், நடப்புநிதியாண்டில் இந்த நான்கு மாதங்களில் ரூ. 25 கோடியும் எதிர்பார்க்கப்படுகிறது.

இந்தப் புதிய வரிகளில், சாதாரண ஏழை எளிய மக்களைப் பதிப்பதுதான் அதிகம் என்பதை நாம் பார்க்க வேண்டும்.

இந்தப் புதிய வரிகளை அகதிகள் பிரச்னையை சமாளிப்பதற்காக விதிப்பதாகவும் அகதிகள் பிரச்சனை தீர்ந்தவுடன் வாபஸ்வாங்கி விடுவதாகவும் நிதியமைச்சர் சவாண் அவர்கள் மீண்டும் மீண்டும் கூறுகிறார்.

உண்மையில், மக்கள் இந்த ரூ 70 கோடி வரிச் சுமைக்கும் மேல்தான் அனுபவிக்கப் போகிறார்கள்.

நிதி மந்திரி சவாண் கூறியபடி, நிச்சயம் அரசு இதை வாபஸ் வாங்கப்போவதில்லை.

மக்களது இரத்தத்தைக் குடித்து ருசிகண்ட இந்தப் பெரு முதலாளிகளின் அரசு நிச்சயம் இப்போக்கிலிருந்து மாறப்போவதில்லை.

ஏனெனில், அகதிகள் பிரச்சனையையோ அல்லது வேறு பிரச்சனையையோ சாக்கிட்டு அரசு வரியை உயர்த்துவது என்பது இதுவே கடைசிமுறையாகும் என்று நிதியமைச்சர் உத்திரவாதம் அளிப்பாரா?

ஏற்கனவே இந்த ஆண்டு மத்திய, மாநில அரசுகளின் பட்ஜெட்டுகளில் ரூ 400 கோடிக்கு பற்றுக்குறை உள்ளது.

இயற்கையின் சீற்றத்தால் ஏற்படும் விளைவுகளுக்கு அரசு 50 கோடி ருபாய்தான் ஒதுக்கியுள்ளது. ஆனால், இப்போதே இந்த வகையில் செலவு ரூ. 130 கோடிக்கு மேலேயே உயரப்போகிறது.

மேலும் இந்த ஆண்டு பட்ஜெட்டில் "யானைப் பசிக்கு சோளப் பொரி" போட்டது போல, அகதிகளுக்காக மத்திய அரசு ரூ. 60 கோடிதான் ஒதுக்கியுள்ளது. இது எந்த மூலைக்கு ?

எனவே, இந்தப் பற்றுக்குறை நாளுக்கு நாள் கூடிக்கொண்டே போகிறது.

இதை ஈடு கட்ட மத்திய அரசு பற்றுக்குறை பட்ஜெட்டை அதிகப்படுத்தும் — வரியைக் கூட்டும். இதைத்தானே, காலமெல்லாம் மத்திய அரசு செய்து வருகிறது? திரு சவாண் அவர்கள் பட்ஜெட்டை சமர்ப்பிக்கும் ஒவ்வொரு முறையின் போதும், இனி இந்த ஆண்டில் புதிய வரிகள் எதுவும் இருக்காது என்று தானே கூறுகிறார்?

ரூ. 500 கோடிக்கு மேல் வருமான வரி கொடுக்காமல் ஏமாற்றி வருகிறார்கள் பெரும் பணக்காரர்கள். இதைக் கறாராக வசூலித்தாலே தேவையான பணம் கிட்டும். பணக்காரர் மீது பரிவுகொண்டு ஆட்சி செய்யும் முதலாளித்துவ அரசாதலால்தான் அவர்கள்மீது வரி விதிப்பதை விடுத்து சாதாரண மக்கள்மீது வரி விதித்து வாட்டுகிறது.

அகதிகள் என்ற பெயரில் சாதாரண மக்கள் மீது வரி போடுவதை ஒருநாளும் அனுமதியோம். இக்கொள்[illegible]கயை எதிர்த்துத் தொடர்ந்துபோராடுவோம்.

# மாணவர் போராட்டத்திற்கு உதவியவர்களுக்கு நன்றி

## மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி புதுவை பிரதேசக் குழு அறிக்கை!

மாணவர்கள் போராட்டப் பேரணி கேட்டுக்கொண்டதன் பேரில் 28—10—71 அன்று வியாபாரிகள் அனைவரும் கதவடைப்பு செய்து மாணவர்களின் போராட்டத்திற்கு ஆதரவு தரும்படி எங்கள் கட்சி 26—10—71 அன்று கேட்டுக்கொண்டது இந்தச் சூழ்நிலையில் தான் 26—10—71 அன்று மா[illegible] அளுநர் எங்கள் கட்சியின் ஒரு குழுவை சந்திக்க அழைத்தார். அத்தகைய ஒரு குழு 27—10—71 காலை அவரைச் சந்தித்தபோது, இறுதி முடிவை மாணவர்களின் போராட்டப்பேரணிதான் எடுக்க முடியும் என்றும், அரசு அவர்களிடம்தான் விவாதிக்க வேண்டும் என்றும், அதை விட்டு. அடக்குமுறை மூலம் பிரச்சனைக்கு தீர்வு காண முயற்சிக்கக் கூடாது என்றும் வற்புறுத்தியது. இந்தச் சூழ்நிலையில் இன்று வியாபாரப் பெருங்குடி மக்கள் அனைவரும் எங்கள் வேண்டுகோளை ஏற்று நூற்றுக்கு நூறு அமைதியான முறையில் கதவடைப்புசெய்து ஆதரவு கொடுத்தீர்கள் உங்களின் இந்த ஜனநாயக உணர்வுக்கு எங்களின் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

### மாணவர் செல்வாக்கை சீர்குலைக்கும் முயற்சியா !

எங்களின் 14-10-71-ந்தேதியிட்ட பிரசுரத்தில் கேட்டுக் கொண்டபடி' தங்களின் முடிவுகளைப் புனர் பரிசீலனை செய்தவர்கள்." "சர்வகலாசாலைக்கு பெயர் சூட்டுவது... முதலியன பற்றி மாணவர், கல்வித்துறை நிபுணர், பொது ஜன பிரதிநிதிகள் கொண்ட உயர் கமிட்டி அமைத்து அதன் முடிவுப்படி நடப்பதாய் அரசு" அறிவிக்கக் கோரியதை இன்று அரசு ஏற்றுக் கொண்டது. புதுவை அரசு புனர் பரிசீலனை செய்தது. மாணவர் பிரதிநிதிகளுக்குட்பட்ட பல்வேறு மக்கள் குழு, அரசு பிரதிநிதிகள் கமிட்டி அமைக்கப்படுமென்று அறிவித்துள்ளது.

அக்கமிட்டி பாண்டிச்சேரிக்கு ஒரு சர்வகலாசாலை தேவையா? அதன் பெயர் என்னவாக இருக்க வேண்டும் என்பன பற்றி தமது கருத்தை அரசுக்கு எடுத்துசொல்லும் அரசு அதன்படி மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கும். அது வரை அரசு ஏற்கனவே எடுத்த நடவடிக்கைகள் அனைத்தும் அமுலாக்காமல் நிறுத்திவைக்கப்படும் என்று அமைச்சரவை முடிவு செய்துள்ளது மாணவர்களிடம் பேசித்தான் தீர்வு காண வேண்டுமென்பதை விட்டு, ஒரு தலைபட்சமாக மந்திரிசபை, அவர்களைச் சந்திக்காமல், அதுவும் அரசின் (ஜி. ஓ. வி. டி.) நிர்வாக நடைமுறை அறிக்கையாக இல்லாமல், மந்திரி சபையின் கொள்கை அறிக்கையாக மட்டும் வெளியிட்டிருப்பது, மாணவர்களுக்கு மக்களிடம் வளரும் ஆதரவை சீர்குலைக்கும் முயற்சியோ என்று யாரும் சந்தேகிப்பார்கள்.

### பழி சுமத்தத் திட்டமா !

மற்றும் சர்வகலாசாலை வேண்டுமா அதன் பெயர் என்னவாயிருக்க வேண்டும் என்று மட்டும் பிரச்னையைக் குறுக்கி உத்தேச சர்வகலாசாலையின் நிர்வாகம் முதலிய தர பிரச்னைகள் பற்றி மௌனம் சாதிப்பது சர்வகலாசாலை வராமல் போனாலும் பரவாயில்லை என்ற நிலைமை உண்டாக்கி, மாணவரையும் அவர்களை ஆதரித்தவர்களையும் பின்னால் பழி சொல்லும் ஏற்பாடோ என்றும் சந்தேகிக்கத் தூண்டுகியது. இருப்பினும், முதல்வரின் 13—10—71-ந் தேதிய சட்டமன்ற அறிக்கையில் உத்தேச சர்வகலாசாலைக்கும் ஆசிரமத்துக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை. அதாவது இதுவரை இல்லைஎன்று மட்டுமேசொல்லி விட்டு, குறைந்தபட்சம் உத்தேச சர்வகலாசாலை நிர்வாகத்தில் 'ஆசிரம ஆதிக்கம் இருக்காது (அதாவது எதிர் காலத்திலும்)' என்று எழுதிக் கொடுக்கவும் 21—10—71ல் மறுத்த புதுவை அரசு இன்று புதுவை மக்களின் பேரெழுச்சிக்குப் பின் 14—10—71 தேதியிட்ட எங்கள் பிரசுரத்தில் கோரியுள்ள கோரிக்கைகளை மாணவர்களும் ஏற்றுக் கொண்டகோரிக்கைகளை முழுமையாக ஏற்றுக் கொண்டுள்ளது என்பதை யாரும் பார்க்க முடியும்.

### நாங்கள் கோருவது

அதே சமயம் உடனடியாக மந்திரிசபை தன் கொள்கை அறிக்கையில் உத்தேச சர்வகலாசாலையின் பெயர் என்பதன் பின் மற்றும் "சர்வகலாசாலை சம்பந்தப்பட்ட இதர பிரச்னைகள்" என்று சேர்க்க வேண்டும். மற்றும் அவ்வறிக்கையை அரசின் நிர்வாக நடவடிக்கை உத்திரவாக மாற்றி கமிட்டி உறுப்பினர்கள் பட்டியல் தயாரித்து, அவர்களின் தனித்தனி ஒப்புதல் பெற்ற; கமிட்டிக்குரு[illegible] (அதிகாரி) அலுவலக சிப்பந்தின் நியமித்து அ கமிட்டியின் செலவுக்கு நிதி ஒதுக்கி அதற்கெல்லாம் மத்திய அரசின் அங்கீகாரமும் பெற்று, அக்கமிட்டி முடிவுகள் சொல்ல ஒரு குறிப்பிட்ட காலகெடுவும் வைத்து நடவடிக்கை எடுக்க வேண்டும்.

### பழிவாங்கக் கூடாது

அரசின் இந்த அறிவிப்பு மூலம் சுட்டிக் காட்டப்படும் புதிய பார்வை முழுமையாகவும் தொடர்ந்தும் இருக்க வேண்டும். எந்த ஒரு மாணவரும், எந்த வகையிலும் இப்போதோ-வருங்காலத்திலோ - நேரடியாகவோ மறைமுகமாகவோ பழிவாங்கப்படக் கூடாது என்று அரசைக் கேட்டுக் கொள்கிறோம்.

### மாணவர்களுக்கு வேண்டுகோள்

இது மாணவர் போராட்டத்தின் மகத்தானமுதற்கட்ட வெற்றியாகும் இந்த வெற்றியை ஸ்திரப்படுத்திக் கொள்ள வேண்டும். தங்களின் ஸ்தாபனங்களை, ஒற்றுமையை மாணவர்கள் பலப்படுத்த வேண்டும். இறுதியான வெற்றியாய்ஒருஜனநாயக பல்கலைக் கழகம் உருவாகி அதில் அவர்கள் உரிமைகள் ஒவ்வொன்றும் ஏற்கப்படும் வரை தொடர்ந்து நடவடிக்கை எடுக்க வேண்டும். இந்தக் கண்ணோட்டத்தில் அவர்களின் போராட்ட பேரணி கூடி ஆதரவு காட்டிய வியாபாரிகளுக்கும், இரண்டு நாள் கோர்ட்டு நடவடிக்கைகளில் விலகி இருந்து மாணவர்களுக்கு ஆதரவு காட்டிய வழக்கறிஞர் சங்கத்துக்கும் மற்றவர்களுக்கும் நன்றி தெரிவித்து விட்டு. அரசின் அறிக்கையைப் பரிசீலித்து முடிவு எடுக்க வேண்டும்

### மக்கள் இயக்கமாக மாற்றுவீர்

அவசரமாக வெளியிடப்பட்ட அமைச்சரவை அறிக்கை சிற்சில குறைபாடுகள் கொண்டதுதான், அது மாணவர்களை புறக்கணிக்கும் முறையில் வெளியிடப்பட்ட அறிக்கைதான் என்றாலும் அவைகளைப் போக்கிவிட முடியும் என்பதையுணர்ந்து இனி நுணுக்கமாகவும், நுட்பமாகவும் பிரச்னைகளை தொடர்ந்து தெரிந்துகொண்டு — இடைக் காலத்தில் சில கட்சிகளும், புதுவை சர்க்காரும் இப் போராட்டத்திற்கு ஆதரவாக இருக்கவில்லை என்றாலும்— அதனை மறந்து புதுவை மக்கள் மட்டுமின்றி அரசினரும் அனைத்துக் கட்சிகளும் உள்ளிட்ட இயக்கமாக வளர்த்து இச் சர்வகலாசாலை பற்றிய கோரிக்கைகளை மத்திய சர்க்கார் ஏற்கச்செய்வதற்கு மாணவர்கள் தம் போராட்டக் களங்களையும் தன்மைகளையும் மாற்றி இயக்கம் நடத்த வேண்டும்.

### உத்தேச கமிட்டிகள் அமைத்திடுக

ஒவ்வொரு கல்வி நிலையத்திலும் உத்தேச சர்வகலாசாலைக்கான கமிட்டிகள் நிறுவப்பட வேண்டும். பெற்றோர்கள் சங்கம் முதலியன திருத்தியமைக்கப்பட நடவடிக்கை எடுக்க வேண்டும். தங்களின் கோரிக்கைகளை மத்திய அரசு ஏற்கச் செய்வதற்கு பாராளுமன்றத்திலும், வெளியிலும் ஒரு யதாஸ்த்து அடிப்படையில் ஆதரவு திரட்டவேண்டும். இதற்கு உகந்த முறையில் கல்வி நிலையங்களுக்கு செல்வது பற்றியும் எப்போது முதல் என்பது பற்றியும் கமிட்டியின் முடிவு செய்யவேண்டும் என்று இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) பிரதேசக் குழு 29—10—71-ல் விடுத்த அறிக்கையில் கேட்டுக்கொண்டுள்ளது.



## ஆசிரியருக்கு வரையும் மடல்

# அலங்காநல்லூர் தியேட்டரில் நடக்கும் விபரீதம்!

ஐயா,

மதுரை மாவட்டம் நிலக்கோட்டை தாலுகாவில் உள்ள அலங்காநல்லூரில் அஜந்தா தியேட்டர் இருக்கிறது.

இங்கு காட்சி நடக்கும் நேரங்களில் டிக்கட் கொடுப்பது போல் கொடுத்து பாதி டிக்கட்டை பஞ்ச் செய்து கொடுக்கும் பழக்கம் இல்லை. டிக்கட்டை கொடுப்பவர்கள் ஏனய்யா இப்படி செய்கிறீர்கள் என்று கேட்டால் உடனே 4 பேர்கள் சேர்ந்து கொண்டு அவரை மிரட்டிக் கொண்டும் வருகிறார்கள்.

அங்கு படம் பார்ப்பவர்கள் பெரும்பாலும் விவசாயத் தொழிலாளர்களும் சாதாரண தொழிலாளர்களும்தான். அவர்கள் நான்கு ஐந்து மைல்களுக்கு அப்பால் உள்ள ஊர்களிலிருந்து இங்கு படம் பார்க்க வருகிறார்கள் படம் பார்த்து விட்டு இரவில் தங்களுடைய ஊர்களுக்குத் திரும்பும் பொழுது வழியில் போலீஸ் இலாகாவினர் அவர்களிடம் நீ எங்கே சென்று வருகிறாய் என்றுகேட்க—அவர்கள் அஜந்தா தியேட்டரில் படம் பார்த்து விட்டு வருகின்றோம் என்று சொல்ல—உடனே போலீஸ்காரர்கள் பாதி டிக்கட் எங்கே என்று கேட்க— இவர்கள் தியேட்டரில் கொடுக்கவில்லை என்று சொல்ல—உடனே "பொய்யா சொல்றே! உன் மீது சந்தேகமா இருக்கு வாடா ஸ்டேஷனுக்கு" என்று கூறி நாள்தோறும் பெரும்பகுதி விவசாயிகளும், தொழிலாளர்களும், மாணவர்களும் தண்டிக்கப்படும் கொடுமை நடந்து கொண்டு வருகிறது.

ஆனால் இதில் ஒரு விசேஷம் என்னவென்றால் அந்தத் தியேட்டரில் ஒரு சிலேடு காண்பிக்கப்படுகிறது என்னவென்றால் பொதுமக்களை வரிஏய்ப்பு செய்பவர்களை பிடித்துக் கொடுத்தால் பரிசுவழங்கப்படும் என்று தமிழக அரசு ஆணையுடன் இந்த சிலேடு போடப்படுகிறது.

நாள் தோறும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்களிடம் டிக்கட்டை கிழித்துக்கொடுக்காமல் அதே டிக்கட்டை திருப்பித் திரும்பக் கொடுத்து திருட்டுத்தனமாக தினந்தோறும் ஆயிரக்கணக்கில் வரி ஏய்ப்புச் செய்யும் இந்த அஜந்தா தியேட்டரில் இதுவரை விசாரிக்கச் சென்ற அதிகாரிகள் விசாரித்தார்களா, இல்லையா என்பது கூட தெரியவில்லை.

இப்படிக்கு,
டி. கந்தசாமி

## ஒன்றுபட்ட உறுதியான இயக்கத்தை வளர்ப்போம்

# விவசாயிகள் சங்கத்தின் செயல் திட்டம்பற்றி அரிகிருஷ்ணக்கோனர்

கல்கத்தா, நவ. 2— கடந்த செப்டம்பர் மாதம் பஞ்சாபில் கூடிய அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் 21வது மாநாட்டில், விவசாய இயக்கத்தின் செயல் திட்டம் வகுக்கப்பட்டது

அது குறித்து, சங்கப் பொது செயலாளர் ஹரிகிருஷ்ணக் கோனர்விடுத்துள்ள அறிக்கையின் விபரமாவது:—

1) விவசாயிகள் இயக்கமனது, விவசாயத் தொழிலாளர்களை ஸ்தாபன ரீதியாகத் திரட்டுவதிலும் கூலி உயர்வுக்காகவும், வேலை வாய்ப்புக்காக நிலத்துக்காகவும் அவர்கள் நடத்தும் போராட்டங்களுக்கு தலைமை தாங்க வேண்டும். இது மிகவும் முக்கியம்.

2) நிலச் சீர்திருத்தங்களுக்காகவும், நில வெளியேற்றத்தை எதிர்த்தும் நடத்தப்படும் இயக்கத்தைத் தீவிரப்படுத்த வேண்டும். அதன் மூலம் விவசாயத் தொழிலாளர்—ஏழை விவசாயிகள் ஆகியோரிடையே ஒற்றுமையைப் பலப்படுத்திட வேண்டும்.

### தீவிர முயற்சிகளில் ஈடுபடுவோம் !

3 வாரம், குத்தகை விவசாயிகளைப் பாதிக்கும் பிரச்சனைகளான கடன், விலை, உரம் முதலானவை குறித்து இயக்கம் நடத்த வேண்டும். இதன் மூலம் படிப்படியாக விவசாயிகள் ஒற்றுமையைக் கட்ட வேண்டும்.

4. ஏனைய சங்கங்களின் தலைவர்களது சீர்குலைவு வேலைகள் இருந்தபோதிலும்கூட— பொதுவான மக்கள் பிரச்சனைகளில் கூட்டுப் போராட்டங்கள் நடத்த மேலும் தீவிரமான முயற்சிகளில் ஈடுபட வேண்டும்.

5. விவசாயிகளுக்கும் விவசாயத் தொழிலாளர்களுக்கும் அதிக அளவில் அரசியல் உணர்வு ஏற்படுத்துவதில் அதிக கவனம் செலுத்தவேண்டும்.

ஜனநாயகத்தைக் காக்க அடக்குமுறையையும். பாசிச பயங்கர வாதத்தையும் எதிர்த்து. மற்ற ஜனநாயக இயக்கங்களின் ஆதரவைத் திரட்டி ஒன்றுபட்ட, உறுதிமிக்க இயக்கத்தைக் கட்ட வேண்டும்.

# தானம் தேவையில்லை

## நேர்மையான வணிகம் செய்திடுக

### வளர்ச்சியடைந்த நாடுகளுக்கு சிறிய நாடுகளின் கோரிக்கை

லீமா, நவ. 2— தென் அமெரிக்காவில்உள்ள பெருநாட்டின் தலைநகராகிய லீமாவில் சென்ற ஞாயிற்றுக் கிழமை அமெரிக்காவின் உதவி பெறும் பிரதான நாடுகளின் கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தில் வளர்ச்சியடைந்துவரும் 95 நாடுகளின் பிரதிநிதிகள் கலந்துகொண்டனர்.

அமெரிக்க செனட்சபை வெளி நாடுகளுக்கான உதவியை நிறுத்த வேண்டுமென்று செய்திருக்கும் முடிவினால் ஏற்படும் விளைவுகளைப்பற்றி அக்கூட்டத்தில் பரிசீலனை செய்யப்பட்டது.

இக் கூட்டத்தில், உதவிகள் தேவை இல்லை; வர்த்தகம் தான் தேவையென்ற தைரியமான முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது.

எங்களுக்கு யாருடைய தானமும் தேவையில்லை. பொருளாதார ரீதியாக போட்டியிடுவதற்கு நியாயமான சந்தர்ப்பம்தான் எங்களுக்குத் தேவை என்று ஒரு ஆப்பிரிக்க நாட்டின் பிரதிநிதி கூறினார்.

அடுத்த ஏப்ரல் மாதம் சிலி நாட்டில் கூடவிருக்கும் ஐ. நா. சபையின் வர்த்தக, வளர்ச்சி மாநாட்டிற்கு மூன்றுவது உலகத்தின் கொள்கைகளை வரையறுத்துக்கொள்வதற்கே இம் மாநாடு கூட்டப்பட்டது.

# தொழிற்சங்கத் தலைவர் குசேலர் கைது!

சென்னை, நவ. 2— போலீஸ் தடை உத்தரவை மீறியதாக சென்னைத் தொழிற்சங்கத் தலைவர் திரு. ஆர். குசேலர் நேற்று இங்கு கைது செய்யப்பட்டார்.

300 தொழிலாளர்கள் அடங்கிய கூட்டமொன்றில் பேசியதற்காக சென்னை—செங்கல்பட்டு தொழிற்சங்க இணைப்புக் குழுவின் தலைவருமான திரு. ஆர். குசேலரை போலீசார் கைது செய்தனர்.

இதுபற்றிய விவரங்கள் பின்னால் வெளியிடப்படும்.

# கல்லூரி மாணவர் உரிமைப் போராட்டம் !

திருப்பூர் நவ 2— தமிழ் இலக்கியம் பயிலும் மாணவர்களுக்கு உதவித் தொகை வழங்கவேண்டுமென்றும் கல்லூரியில் எம். ஏ. இலக்கியப் பிரிவை ஆரம்பிக்க வேண்டுமென்றும் கோரி திருப்பூர் சிக்கண்ணா அரசினர் கலைக் கல்லூரியில் பயிலும் 1, 2, 3-ம் ஆண்டு தமிழ் இலக்கிய மாணவர்கள் சுமார் 40 பேர் இன்று திருப்பூர் தாலுகா அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டமும் மறியலும் நடத்தினர்கள்.

இந்த மாணவர்கள், கல்லூரி உள்ள கல்லிப்பாளையத்திலிருந்து ஊர்வலமாக தாலுகா அலுவலகத்திற்கு வந்தனர். "தமிழக அரசே தூங்காதே" 'கல்வி இலாகாவே தூங்காதே" "வேண்டும், வேண்டும் உறுதிமொழி வேண்டும்" "விடமாட்டோம், விடமாட்டோம், இறுதிவரை விடமாட்டோம்", தமிழ் இலக்கிய மாணவர்களை புறக்கணிக்காதே' "தமிழ் இலக்கிய மாணவர்களுக்கு உதவித் தொகை உடனே வழங்கு" என்று தாலுகா அலுவலகம் முன்பு மாணவர்கள் சுமார் 50 நிமிடங்கள் கோஷமிட்டனர்.

### பஸ் முன் மறியல்

இன்று காலை கோவையிலிருந்து திருப்பூர் வழியாக திருச்சி செல்லும் அரசினர் போக்குவரத்து விரைவு பஸ் திருப்பூர் தாலுகா அலுவலகம் முன்பு வந்ததும் மாணவர்கள் பஸ்முன் உட்கார்ந்துகொண்டு மறியல் செய்தனர். பஸ்ஸை நகர விடவில்லை. ஜில்லா கலெக்டர் வந்து இதில் ஒரு சமரசம் செய்ய வேண்டும் என்று மாணவர் கோரினர்.

# டேக்சி தொழிற்சங்கங்களுக்கு அறிவிப்பு

திருச்சி, நவ. 2— போனஸ் பிரச்சினையில்கார்ப்பரேஷன் பிடிவாதத்தை எதிர்த்து தொழிலாளர் 8 1/3 சதவிகிதம் பெறப் போராடி வருவதை :பாராட்டுவதோடு மேலும் ஒன்றுபட்டு நடவடிக்கை எடுக்க திருச்சியில் 30—10—61ந் தேதி காலை டேக்சி தொழிற்சங்க பிரதிநிதிகள் கூட்டம் நடைபெற்றது.

தொழிலாளர்களுக்கு யூனிட் அடிப்படையில் குறைந்தபட்ச போனஸ் 8 1/3 சதவிகிதம் கொடுக்க வற்புறுத்தியும் தினக்கூலி தொழிலாளர்களை மாதச் சம்பளத் தொழிலாளர்களாக ஆக்கவும், மற்றும் பல கோரிக்கைகளுக்காகவும் நிர்வாக இயக்குனர், தொழில் அமைச்சர், லேபர் கமிஷனர் ஆகியோர்களை சென்னையில் 8—11—71-ந் தேதி டேக்சி தொழிற்சங்க பிரதிநிதிகள் பேட்டி கண்டு மகஜர் கொடுத்தனர். பின்னர் மேற்கொண்டு செய்ய வேண்டிய நடவடிக்கையை சென்னையில் தீர்மா

(7-ஆம் பக்கம் பார்க்க)

# கோவையில் தண்ணீர் தேக்கம்

## மார்க்சிஸ்ட் தோழர்கள் சேவை!

கோவை, நவ. 2— கோவை ரத்தனபுரி பகுதியில் மழைத் தண்ணீர் வீடுகளில் புகுந்து எங்கும் முழங்கால் தண்ணீர் நிற்கின்ற நிலையில் அப் பகுதி மக்களெல்லாம் பி ஆர் மன்றத் தோழர்களிடத்தில் முறையிட்டனர். உடனே கொட்டும் மழையையும் பொருட்படுத்தாமல். பி. ஆர் மன்றத் தோழர்களும், கோவை நகர வடக்கு டிவிசன் மார்க்சிஸ்ட் கட்சித் தோழர்களும் சங்கனூர் பஞ்சாயத் அதிகாரிகளை பேட்டிகண்டு முறையிட்டனர். அப்போது தோழர்களிடத்தில் நிர்வாகிகள் பொறுப்பாகப் பேசாமல் பொறுப்பற்று தட்டிக் கழித்து பேசினர்கள் நமது தோழர்கள் விடாமுயற்சியோடு தண்ணீரால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவும் முறையில் அப்பகுதியில் உள்ள வீடுகளுக்கு குழந்தைகளையும் வயோதிகர்களையும் அழைத்துச் சென்று பாதுகாத்தனர். பஞ்சாயத்து நிர்வாகிகளிடத்தில் வாதாடி மோட்டார் பம்பு செட்டுகளை வாங்கி வந்து இரவுபகலாக மோட்டாரை ஓட்டி அங்கு குளம்போல தண்ணீர் தேங்கியிருந்ததை சங்கனூர் பள்ளத்தில் இறைத்து விட்டனர் இந்த காட்சியை பார்க்க ஏராளமான மக்கள் கூடிய வண்ணமாக இருந்தனர். கூடிய மக்களெல்லாம் பி. ஆர். மன்றத் தோழர்களையும் மார்க்கிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஊழியர்களையும் பாராட்டினார்கள்.

# வேலை கிடைக்காததால் வாலிபர்தற்கொலை

மதுரை, நவ. 2— மதுரையைச் சேர்ந்த மாணிக்கம் என்பவரின் மகன் வின்செண்ட், (வயது 24) கடந்த சில மாதங்களாக வேலை தேடி அலைந்தாராம். எவ்வளவோ கஷ்டபட்டு வேலைதேடியும் கிடைக்காததால், அந்த வாலிபர் மூட்டைப்பூச்சி மருந்தைக் குடித்தாராம். ஆபத்தான நிலையில் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்ட அவர், நேற்று மரணமடைந்தார்.

இது சம்பந்தமாக, மருத்துவமனை போலீசார் புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

(8-ஆம் பக்கத் தொடர்ச்சி)

ணிப்பதென தீர்மானிக்கப்பட்டது.

தனித் தனியே நடைபெறும் இயக்கத்தை ஒன்றுபட்டு நடத்த ஒத்துழைப்புஅளிக்கும் படி கோருவதோடு8—11—71 தேதி சென்னைக்குகீழ்க்காணும் முகவரிக்கு பிரதிநிதிகளை அனுப்பி வைக்கும்படி தோழர் ப. காசிநாதன் (தலைவர்) கேட்டுக் கொண்டுள்ளார்.

சென்னை முகவரி:—

ஜி. பி, தாமோதரன்
இன்டஸ்ட்ரியல் எஸ்டேட்
ஜெனரல் ஓர்க்கர்ஸ் யூனியன்
2.பி.பி ரோடு, கிண்டி.
சென்னை-32. போன்:801518

# விவசாய நெருக்கடி ஆழமாவது எப்படி?

“இந்தியாவில் விவசாய நெருக்கடியானதுமேலும்ஆழமாகிக் கொண்டிருக்கிறது. நமது நாட்டிலுள்ள ஆளும் வர்க்கங்கள் கடைப்பிடிக்கும் கொள்கைகள் தான் இந்த நெருக்கடிக்குக் காரணம். பெரும் நிலவுடைமையையும், அரைகுறை நிலபிரபுத்துவ உறவுகளையும் அடிப்படையாகக் கொண்ட முதலாளித்துவ அபிவிருத்தி என்ற கொள்கைதான் அது.

விரல் விட்டு எண்ணக் கூடிய பெரும் நிலப்பிரபுக்களும் பணக்கார விவசாயிகளும் கிராமப்புறப் பொருளாதாரத்தில் நன்ருக ஊன்றிக்கொண்டு கொழுத்து வருகிருர்கள். அதனுல் தான் கோடிக்கணக்கான பாடுபடும் விவசாயிகளும், தொழிலாளர்களும் மேலும் மேலும் பர்ப்பர்களாக வக்கற்றுப் போய்விட்டார்கள். இதன் விளைவு என்ன? கிராமப் புறங்களிலேவர்க்க முரண்பாடுகள் கூர்மையடைகின்றன.

இந்தக் காலகட்டம் எப்படிப் பட்டது தெரியுமா? விவசாயிகள் மீதும் விவசாயத் தொழிலாளர் மீதும் முன்னை விடக் கூடுதலான சுரண்டல்-முன்னை விடக் கூடுதலான நில வெளியேற்றங்கள் - முன்னைவிடக் கூடுதலான வேலையில்லாத் திண்டாட்டம்...முன்னை விடக் கூடுதலான சுமைகள்! இப்படிப்பட்டது தான் இன்றைய காலகட்டம்.

அரசாங்க அமைச்சர்களும் அதிகாரிகளுமே நிலச்சீர்திருத்தங்களைப் பற்றியும் மக்களின் நல் வாழ்வைப்பற்றியும் பெரிய பெரிய அளவில் பலத்த குரலில் பேசுகிருர்கள். கள்ளங்கபடமற்ற மக்களை ஏமாற்றி வஞ்சிக்கவே இப்படியெல்லாம் பேசுகிருர்கள்.

அதேசமயத்தில், இவர்கள் என்ன செய்கிருர்கள்? அந்த அலங்காரப் பேச்சுக்கு நேர்மாருன வகையிலே, பெரும் நிலச்சுவான்தார்களுக்கு உதவிகள் புரிந்து கொண்டிருக்கிருர்கள்.

ஆனுல், ஸ்தாபன ரீதியாக ஒன்று திரண்டுள்ள விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களும், இத்தாக்குதல்களை தலை குனிந்து ஏற்றுக்கொள்ளவில்லை. நிலவெளியேற்றங்களை எதிர்த்துக் கடுமையான போராட்டங்கள் நடத்தி வருகிருர்கள்; உழுதுபிழைத்திட சொந்த நிலம் வேண்டுமென்று போராடுகிருர்கள்; கூலி உயர்வுக்காகப் போராடுகிருர்கள்; நல்ல வேலை நிலைமைகளுக்காகவும் போராடிக் கொண்டிருக்கிருர்கள்.

சுயநல வர்க்கங்களுக்கு எதிராக இவர்கள் நடத்தும் இப்போராட்டங்களை அரசினர் வரவேற்கிருர்களா? கிடையாது. அதற்குமாருக, ஒவ்வொரு மாநிலத்திலும் மக்களுக்கு எதிராக மிருகத்தனமான அடக்குமுறையைத் தீவிரப்படுத்துகிருர்கள். இயக்கம் மிகமிகப் பலமாக விளங்கும் மேற்கு வங்கத்தில், இந்த அரசாங்கத்தின் தாக்குதலானது பாசிஸ்ட் போக்கில் உள்ளது. இந்தக் காலகட்டத்தில் விவசாயிகள் சங்கத்தைச் சேர்ந்த தலைவர்களும் ஊழியர்களும் மத்திரமே 200பேர் களுக்குமேல் படுகொலை செய்யப்பட்டிருக்கிருர்கள். இந்தப் படுகொலைகளைப் புரிந்தவர்கள் போலீஸாரும், நிலப்பிரபுக்களாலும் ஆளும் காங்கிரஸினாலும் திரட்டப்பட்டுள்ள குண்டர்களுமே ஆவார்கள்.

இந்திய நாடு இது போன்ற தொரு குரூரமானத் தாக்குதலை இதற்கு முன் என்றுமே கண்டதில்லை.

ஆனுல், இந்தத் தாக்குதலை, தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்கள் எப்படி விரத்ரமாக எதிர்த்துப் போராடுகிருர்களோ, அதேபோன்று விவசாயத்தொழிலாளர்களும் விரத்ரமாக எதிர்த்துப் போராடுகிருர்கள்.

ஒரே வார்த்தையில், சொன்னுல் இது தான் இன்றைய இந்தியாவின் நிலைமை!”

(1971 அக்டோபர் 26—28 தேதிகளில் ரோமா புரியில் நடந்த சர்வதேச விவசாயத் தொழிலாளர்கள், தோட்டத் தொழிலாளர்கள், மாநாட்டில், இந்திய விவசாயிகள் சங்கப் பொதுச்செயலாளர் தோழர் ஹரிகிருஷ்ணகோனுர் மேற்கண்டவாறு பேசினுர்.)

# பி அண்டு சி. தொழிலாளர் குறைகளைப்பற்றி கவலையில்லை! தி.மு.க.வின் பதவிவேட்டை

சென்னை, நவ. 2—
கடந்த 25 ஆண்டுகளாக முதலாளியுடன் சேர்ந்து நின்று தன் விச்சைப்படி தொழிற் சங்கத்தை நடத்திச் செல்வதில் புகழ்பெற்ற முன்னுள் தொழிற்சங்கத் தலைவர் திரு. எஸ். சி. சி. அந்தோணிப் பிள்ளை விலக்கப்பட்ட பிறகு, திமுகவைச்சார்ந்த திரு இரா. கணபதியை கீழ்க்காணும் நிபந்தனையுடன் தாற்காலிகத் தலைவராக தொழிலாளிகள் நியமித்தார்கள்

1) தலைவரைத் தொழிலாளர்கள் நேரடியாகத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

2) அதற்கு இடையூருக உள்ள பைலா (7) ஐ உடனடியாகத் திருத்த வேண்டும்.

3) செக்—ஆப் சிஸ்டம் (தொழிற்சங்கத்திற்காக முதலாளிகள் தொழிலாளர்களிடம் பணம் வசூலிப்பது) ரத்து செய்யப்படவேண்டும்.

4) எல்லா தொழிலாளர்களையும் தொழிற் சங்கத்தில் அங்கத்தினர்களாகச் சேர்க்க வேண்டும்.

முக்கியமான இந்த 4 நிபந்தனைகளும் தொழிலாளர்களுடைய நீண்ட நாளைய கோரிக்கைகளாகும்.

## கடும் எதிர்ப்பு

முதலில் இந்த நிபந்தனைகளுக்கு ஒப்புக்கொண்ட தி.மு.க.வினர், அதன் பிறகு சட்டத்தைத் திருத்தி தேர்தல் நடத்த மறுத்துவிட்டார்கள். அவர்கள் தாங்கள்தான் தொழிற்சங்கத்தின் தானைத் தலைவராக இருக்கவேண்டும் என்று குரங்குப் பிடிபிடித்து சண்டித்தனம் செய்வதைக் கண்ட தொழிலாளர்கள் அவர்களின் இந்தப் போக்குக்கு கடும் எதிர்ப்புத் தெரிவித்தார்கள். கடுமையான எதிர்ப்பைக்கண்ட தி.மு.க.வினர் சட்டத்தைத் திருத்தி தேர்தல் நடத்துவதாக வாக்குறுதி அளித்தார்கள். இந்த வாக்குறுதி அளிக்கப்பட்டு மூன்று மாதங்களாகின்றன.

## பணமும் கோவிந்தா! தேர்தலும் கோவிந்தா!!

தேர்தல் நடத்துவதாக வாக்குறுதி அளிக்கப்பட்ட பிறகு தேர்தல் நடத்துவதற்கென்று தொழிலாளர்களிடமிருந்து சுமார் 4 ஆயிரம் ரூபாய்வரை வசூல் செய்தார்கள் அந்தப் பணமும் கோவிந்தா ஆகிவிட்டது. ஆனுல், தேர்தல் நடத்தப்படவில்லை. அதுமட்டுமல்ல, சாதாரணப் பிரச்னைகளிலெல்லாம் தி.மு.க.வினர், அரசாங்கத்தை தங்களுக்கு ஆதரவாகத் தலையிடச் செய்து தொழிலாளர்கள் மத்தியில் பிளவை ஏற்படுத்தி முதலாளிகளுக்கு வால் பிடிக்கும் பிற்போக்குக் கொள்கையைக் கடைப்பிடித்து வருகின்றனர். தேர்தல் நடத்தாமல் காலம் கடத்துவதற்கு “திறமைசாலியான தலைவர் கிடைக்கவில்லை. தேடிக் கொண்டிருக்கிருேம்” என்று காரணம் கூறுகிருர்கள்.

கையாலாகாத தி.மு.க.வினர் தங்களுக்கு ஆதரவாக அரசாங்கத்தைத் தலையிடச் செய்வது நிர்வாகத்திற்கு மிகவும் சாதகமாக உள்ளது

## நிர்வாகத்தின் கொடிய போக்கு

சில இலாகாக்களில், குறிப்பாக, சாயப் பட்டறையில் வேலைப்பளு சுமத்தப்பட்ட தொழிலாளிகளுக்கு ஒப்பந்தப்படி கூலி கொடுக்கவில்லை.

தொழிலாளர்களை அநியாயமாக வேலை நீக்கம் செய்வது, வேலைப்பளுவைச் சுமத்துவது, நடுவர் தீர்ப்புப்படி கொடுக்க வேண்டிய சம்பளப் பாக்கிகளை கொடுக்காமலிருப்பது, கார்டிங் இலாகாவில் கார்டுகள் உடைப்பது, விடுமுறை இன்றி 7 நாட்களும் வேலைகொடுப்பது இப்படி அநேகநிர்ப்பந்தங்களைக் கட்டாயமாகத் திணிக்க நிர்வாகம் துணிந்துள்ளது.

தி. மு. க. வினர் அவசரமாகக் கவனம் செலுத்தி தீர்க்கவேண்டிய பிரச்னைகளை விட்டு விட்டு நாங்கள்தான் தொழிற்சங்கம் நான்தான் தானைத்தலைவன் என்ற இறுமாப்புடன், தொட்டதற்கெல்லாம் அமைச்சர்களைத் தலையிடச் செய்து தேர்தலைத் தள்ளிவைத்து அமைச்சர்கள் மூலம் நிர்வாகத்துடன் தொழிலாளர்களுக்கு விரோதமான ஒப்பந்தங்கள் செய்து கொள்ளத் தான் தி மு க தீவிரமாக முனைகிறது, என்பதைத் தொழிலாளர்கள் புரிந்துகொள்ள வேண்டும்

## காட்டூராரின் காட்டுத் தர்பார்

தி. மு. க. வைச் சேர்ந்த பெரும் தலைவர் திரு. காட்டூர் நடத்துகின்ற காட்டு தர்பார் பி. அண்டு சி தொழிலாளர்களுக்கு நன்கு தெரியும்.

நியாயமானபோனஸ் கோரி நாடு முழுவதும் பாட்டாளி வர்க்கம் போராட்டம் நடத்திக் கொண்டிருக்கும்போது, தி மு க வினர் தங்கள் அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தியும், முதலாளியிடம் நல்ல பிள்ளையாக நடந்து கொண்டும் தொழிற்சங்கத்தைக் கைப்பற்ற சூழ்ச்சி செய்கிருர்கள்.

## ஒன்றுபட்டு போராட தயாராகுக

தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு உடனடியாகத் தீர்வு காணுவிட்டால் 6—11—71முதல் வேலை நிறுத்தம் செய்யப்போவதாக 57 பேர் கொண்ட பெரும் பான்மையான நிர்வாகக் குழு உறுப்பினர்களால் நோட்டீஸ் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்த வேலைநிறுத்தத்தை உடைப்பதற்காக 24-10-71ல் தி மு க.வினர் திரு இரா. கணபதி தலைமையில் ரகசியக் கூட்டம் போட்டு திட்டம் வகுத்துள்ளார்கள்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் பி அண்டு சி தொழிலாளர்கள் திருட்டனுக்குத் துணை போகும் தி மு. க.வின் சூழ்ச்சியை முறியடித்து உடனடியாக தேர்தல் நடத்தி, ஒன்றுபட்டுப் போராடினுல்தான் வெற்றி பெற முடியும்,

ஒன்றுபட்ட போராட்டத்திற்கு உடனடியாகத் தயாராவதே தொழிலாளர்களின் அவசரத் தேவையாகும்.

—ந. நி.

# தென்வியத்நாமில் அமெரிக்க பொம்மலாட்டம்!

சைகோன், அக். 31—
தனது அமெரிக்கக் குருநாதரின் ஆதரவோடும் ஆசீர்வாதத் தோடும், சைகோனிலுள்ள பொம்மை அரசாங்கம் நடத்தி வந்த தனி நபர் நாடகம் முடிந்து விட்டது. இந்நாடகத்தின் ‘தன்னிகரில்லாத் தலைவர்’ அமோகவெற்றி பெற்றுவிட்டார். ஆனுல் குருநாதரும் சீடனும் நடத்திய இந்த நாடகத்தில் பாவம், ஜனநாயகம்தான் கொலையுண்டுபோய்விட்டது.

நிகுயென் வான் தியூ ஆரம்பத்திலிருந்தே எதிர்பார்த்து வந்தபடியே 91 சதவிகித வாக்குகளைப் பெற்றுவிட்டார். அவர் நாடிய நம்பிக்கை வாக்கெடுப்புக்குத் தேவையான 50 சத வாக்குகளைக் காட்டிலும் இது மிகவும் அதிகம் தான். 5.5 சதவிகித வாக்குகள்தான் அவருக்கு எதிராக விழுந்தன. சுமார் 3 சதவிகித வாக்குகளைக் காணவில்லை

தேர்தல் முடிவுகளையும் வாக்குகள் அளிக்கப்பட்ட விதத்தையும் பார்த்தாலே இந்த ஜனுதிபதித் தேர்தல்ஒரு நாடகம்தான் என்பதை யாரும் எளிதில் புரிந்து கொள்ளலாம்.

## அமெரிக்க ஆதரவை மூடி மறைக்க

ஆரம்பத்திலிருந்தே தாம் திரும்பவும் தேர்ந்தெடுக்கப் பட்டுவிட வேண்டும் என்பதில் தியூ குறியாக இருந்தார். இந்த ஜனுதிபதித் தேர்தலில் தென் வியட்நாமிலுள்ள அமெரிக்கத் தூதுவர் எல்ஸ்வொர்த் பங்கர் வகித்த பாத்திரமும் அற்ப சொற்பமானதல்ல. தியூவுக்கு அமெரிக்கா நேரடியாக ஆதரவளிப்பதை மூடி மறைப்பதற்காக, அவர் எப்படியாவது ஓர் எதிர்க்கட்சி வேட்பாளரை நிறுத்திவிட வேண்டும் என்று அரும்பாடுபட்டுப் பார்த்தார் எதிர்க்கட்சி வேட்பாளர் இல்லாதுபோனுல், தேர்தல் வெறும் கேலிக்கூத்தாகிவிடும் என்று கருதினுர்.

## உப ஜனுதிபதி ‘கீ’யின் நிலைமை

எனவே, அவர் ஜெனரல் துவாங் வான் மின்னையும், உப ஜனுதிபதி நிகுயென்காவ் கீயையும் அணுகி, அவர்களைத் தேர்தலில் போட்டியிடுமாறு கேட்டுக்கொண்டார். ஜனுதிபதித் தேர்தலில் நிற்க உப ஜனுதிபதி கீக்குத் தகுதி கிடையாது என்ற சுப்ரீம் கோர்ட் தீர்ப்பை மாற்றுமாறும ஜனுதிபதி தியூவிடம் திருவாளர் பங்கர் கூறிஞர். சுப்ரீம் கோர்ட்டும் தீர்ப்பை மாற்றி, கீயைத் தேர்தலில் போட்டியிட அனுமதித்தது.

ஆனுல் கீயும் சரி, மின்னும் சரி—தேர்தலிலிருந்து வாபஸ் வாங்கிக்கொண்டனர் அமெரிக்க ஆதரவுடன் நிற்கும் தியூவை எதிர்ப்பதில் பயனில்லை என்று அவர்கள் முடிவு கட்டினர் இதன் பிறகு சுப்ரீம் கோர்ட் கீ தேர்தலில் நிற்கத் தகுதியற்றவர் என்று மீண்டும் தீர்ப்பளித்தது

என்ருலும், வேட்பாளர் பட்டியலில் ஒரு வேட்பாளரின் பெயர் இடம் பெற்று விட்ட பிறகு, அவர் வாபஸ் பெற்ருலும் கூட அவர் பெயர் நீக்கப்படாது. அதுதான் சட்டம்.

எனவே எப்படியும் அவர்கள் இருவரது பெயர்களும் வேட்பாளர் பட்டியலில் இடம் பெற்று இருக்கும் என்ற திருப்தி பங்கருக்குக் கிட்டியது.

## தியூவின் சாமார்த்தியம்

தியூ மிகவும் சாமர்த்திய சாலி. ஆரம்பத்திலிருந்தே, எல்லாம் தமக்குச் சாதகமாகவே இருக்கும் விதத்தில் அவர் சகல காரியங்களையும் கவனித்துக்கொண்டார். முதலாவதாக, தமக்கு எதிராக எவரும் தேர்தலில் நிற்காதவாறு பார்த்துக்கொள்ளும் எண்ணத்தோடு, தமது எதிராளிகள் எவரும் தேர்தல் களத்தில் இறங்க இயலாத விதத்தில் வியத்நாம் பாராளுமன்றம் எனப்படுவதன்மூலம் ஒரு சட்டத்தையும் நிறைவேற்றிக்கொண்டார். தமது வேட்பு மனுவை ஆதரிக்குமாறு பல பாராளுமன்ற உறுப்பினர்களை நிர்ப்பந்தித்து கையெழுத்தும் வாங்கிக் கொண்டார்.

## கள்ள வாக்குகளும் அரசாங்க தந்திரமும்

தமது வேட்பு மனுவை வாபஸ் பெற்றுக்கொண்ட மின், தியூ நடத்திவரும் தேர்தல் நாடகத்தை உதாரண பூர்வமாக விளக்கும் ஓர் அறிக்கையையும் வெளியிட்டார். எதிர்க்கட்சியின் தேர்தல் இயக்க ஊழியர்களைக் கைது செய்யுமாறு தியூ போலீசுக்கு ரகசிய உத்தரவு அனுப்பியதை அறிக்கை அம்பலபடுத்தியது. மேலும் வாக்குப் பெட்டிகளில் கள்ள வாக்குகளைப் போட்டு நிறைக்குமாறு தியூ தமது ஊழியர்களுக்கும் உத்தரவிட்டிருந்தார். அத்துடன் தேர்தல் இயக்கத்தில் தியூ அரசாங்க எந்திரத்தையும் தவருன விதத்தில் பயன்படுத்திஞர். சர்க்காருக்குச் சொந்தமான கார்கள், டெலிபோன், ஒலிபெருக்கி முதலியவற்றையும் அவர் தமது ஆதரவாளர்களின் உபயோகத்துக்கு வழங்கினுர்.

எனவே, இப்போது நடந்து முடிந்துள்ள தேர்தல் தியூவின் எதிராளிகள் கூறிவந்த விஷயங்கள் உண்மையானவையே என்பதை மெய்ப்பித்துள்ளன. தமக்கு அமோகமான வாக்குகள் கிட்டும் விதத்தில் தியூ தேர்தலை நடத்தி முடித்து விட்டார்

## கேலிக்கூத்து தேர்தல்

தென் வியத்நாமின் பெரும் பகுதி விடுதலை முன்னணி வீரர்களின் வசம் உள்ளது எனவே, இந்தத் தேர்தலே ஒரு கேலிக் கூத்து என்பதில் சந்தேகமில்லை. எனவேதான் வியத்காங் வீரர்களின் குண்டுவீச்சுக்கும், எதிர்க்கட்சியாளர்களின் ஆர்ப்பாட்டங்களுக்கும் மத்தியில் இந்தத் தேர்தல் நடந்து முடிந்துள்ளது. சைகோன் உட்பட தென் வியத்நாமைச் சேர்ந்த ஒவ்வொரு நகரிலும் உள்ள ராணுவ இலக்குகளையே வியத்காங் வீரர்கள் குறி வைத்துச் சுட்டார்கள் எனலாம்; வாக்குப் பதிவு தொடங்குவதற்கு இரண்டே மணி நேரத்துக்கு முன்பு சைகோன் முதல் தாக்குதலுக்கு உள்ளாயிற்று. என்ருலும் “வீராதி வீரரான” தியூ, சைகோனில் உள்ள வாக்குச் சாவடிக்குச் சென்று தமது வாக்கைப் பதிவு செய்தார்; உப ஜனுதிபதி கீயும், மின்னும் வாக்களிக்கவே இல்லை.

## நிக்சனுக்குத் தந்தி

“சர்வாதிகார அமைப்புக்கெதிரான வியத்நாம் சக்திகள்” என்ற பெயரில் புதிதாக உருவாக்கப்பட்டுள்ள ஒரு ஸ்தாபனத்தின் பெயரால், உப ஜனுதிபதி கீயின் அலுவலகம் ஓர் அறிக்கையை வெளியிட்டது. இந்தத் தேர்தலே அரசாங்கம் நடத்திய ஒரு நாடகம் ஆதலால், ஜனுதிபதித் தேர்தல் முடிவுகளை ஏற்றுக் கொள்ள இயலாது என்று அந்த அறிக்கை கூறியது. அமெரிக்கச் சர்க்காருக்கு இந்த ஸ்தாபனம் ஒரு தந்தி அனுப்பியது நாட்டுமக்களின் விருப்பத்துக்கு மாருக, அமெரிக்கத் தூதுவர் எல்ஸ்வொர்த் பங்கரின் ஆதரவோடு தியூ நடத்திய தேர்தல் நாடகம் இது, எனவே ஜனுதிபதி நிக்சன் தியூவுக்கு அளித்து வரும் ஆதரவை நிறுத்த வேண்டும் என்று அந்தத் தந்தி கேட்டுக் கொண்டது.

## வட-வியத்னும் ஜனுதிபதி கண்டனம்!

வடக்குவியத்நாம் ஜனுதிபதி திரு. தாங் இந்தத் தேர்தலைப் பற்றிக்கூறுகையில், தென் வியத்நாம் மக்களின் உள் நாட்டுவிவகாரங்களில் அமெரிக்க அரசாங்க வட்டாரங்கள் மான ஈனமற்றுக் கேவலமான முறையில் தலையிட்டு, சர்வாதிகாரியான தியூவை மீண்டும் பதவியில் அமர்த்த மேற்கொண்ட முயற்சியே இது என்று கண்டித்துள்ளார்.

தென் வியத்நாமில் நடந்தேறியுள்ள இந்தக் கேலி கூத்து, ஜனநாயகத்தையே கேலிசெய்கிறது; மேலும் வியட்நாமில் தமது கொள்கைகள் செல்லுபடியாகாதுபோனதை மூடிமறைக்க, அமெரிக்காகீழ்த்தரமான நடவடிக்கைகளிலெல்லாம் இறங்கியுள்ளது. என்பதையும் புலப்படுத்துகிறது.

# சீன தரும் பாடம்
## “தன்னையே நம்பிநிற்கும் நாட்டைத்தான் தரணி மதிக்கும்”
### காமராஜர் கருத்துரை

சென்னை, நவ. 1—
சீன ஐக்கிய நாடுகள் சபையில் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. சீன போட்டநிபந்தனைகளின் அடிப்படையிலேயே அது ஐ. நா. சபையில் சேர்க்கப் பட்டிருக்கிறது.

இது இந்தியாவின் கண்களைத் திறந்து விடவேண்டும். எந்த நாடு தன் சொந்த வலிமையில் தன்னையே நம்பி நிற்கிறதோ அந்த நாட்டைத் தான் உலகம் மதிக்கும் என்ற உண்மையை இந்தியாதெரிந்து கொள்ள வேண்டும் என்று திரு. காமராஜர் அக்.31ந்தேதி இங்கு கூறினுர்.

இந்தியா சுதந்திரம் அடைந்து இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகுதான் சீன சுதந்திரம் அடைந்தது ஆனுல் யாரிடமும் உதவி கேட்காமலும், எந்த அயல் நாட்டு உதவியையும் எதிர்பார்க்காமலும் சீன தன்னைத் தானே வளர்த்துக்கொண்டது. கடின உழைப்பும், தன்மான உணர்வும் சீனவைத் துரித வளர்ச்சியைக் காணச்செய்தது என்று திரு. காமராஜர் கூறினுர்.

பாரதி தினம், காந்தி ஜெயந்தி கொண்டாட்டங்களின் போது, சென்னையில் நடந்த போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்கி பேசுகையில் திரு. காமராஜர் மேற்கண்டவாறு கூறினுர்.

# பீகிங் விளையாட்டுப் போட்டிக்கு முன் தயாரிப்பு ஏற்பாடு

பீகிங், நவ. 2—
மக்கள் சீனத்தின் தலைநகரான பீகிங்கில் ஆசிய—ஆப்ரிக்க நாடுகளின் “பிங்பாங்” (மேஜைப் பந்தாட்டம்) நடக்கிறதல்லவா? அதற்காக இந்தியாவிலிருந்து 11 பேர் வந்திருக்கிற செய்தியை ஏற்கனவே தந்துள்ளோம் அந்த விளையாட்டு பற்றிய விவரங்களை “நவசீனச்” செய்தி நிறுவனம் தந்துள்ளது

மொத்தம் 51 நாடுகள் இந்த விளையாட்டுப் போட்டியில் கலந்து கொள்கின்றன. நவம்பர் 18-ம் நாள் புதன்று விளையாட்டுப்போட்டி ஆரம்பமாக விருக்கிறது. பல்வேறு நாடுகளிலிருந்து வந்துள்ள பிங்பாங் போட்டியாளர்களுக்கு சீனத் தலைநகரில் உள்ள மக்கள் உற்சாகமான வரவேற்பு அளித்து, வைபவங்கள் நடத்துகின்றனர்.

வியத்நாமிலிருந்து வந்துள்ள பிங்பாங் போட்டியாளர்களை சீன, கொரிய தோழர்கள் உற்சாகமுடன் வரவேற்று அமெரிக்க ஆக்கிரமிப்பாளர்களை எதிர்த்து அவர்கள் நடத்தி வரும் வீரப்போராட்டங்களுக்கு வாழ்த்துக் கூறினுர்கள்

ஏகாதிபத்தியத்தைஎதிர்த்த போராட்டத்தில்,ஆசிய—ஆப்பிரிக்க மக்கள் ஒற்றுமையுடனும் நல்லுறவுடனும் இணைந்து செயல்பட வேண்டுமென்று வாழ்த்துக் கூறினர்.

இதுவரை பீகிங் வந்துள்ள 31 நாட்டுப் பிரதிநிதிகளின் குழுப் பிரதிநிதிகள் கூடி, மேஜைப் பந்தாட்டப் போட்டியின் (பிங்பாங்) நிகழ்ச்சி குறித்து முடிவு செய்தனர். இந்தக் கூட்டத்திற்கு ஜப்பானைச் சேர்ந்த “கோஜிகோடோ” என்னும் விளையாட்டு வீரர் தலைமை வகித்தார். அவர் பேசுகையில் இத்தகைய போட்டி, ஆசிய ஆப்பிரிக்க நாடுகளிடையே நல்லுறவையும் நல்லிணக்கத்தையும் ஏற்படுத்துமென்ருர்.

இத்தகைய போட்டியை நடத்த ஏற்பாடு செய்த மக்கள் சீனம், அதன் மகத்தான சர்வதேசீய சகோதரத்துவப் பணியைச் செய்து வருகிறது என்ருர்.

இந்தப் போட்டியின் நிறுவனக் குழுவின் தலைவரான “வாங்மெங்” என்பவர், 70 ஆசிய—ஆப்பிரிக்க நாடுகளுக்கு அழைப்பித அனுப்பியதாகவும், அவற்றில் 51 நாடுகள் அழைப்பைஏற்றுக்கொண்[illegible] என்றும் கூறினர். ஏற்காத [illegible]களில் இந்தோனேஷியா, பிலிப்பைன்ஸ், ஜோர்டான்—ஆகிய நாடுகளும் அடங்கும்.

வாங்மெங், மேலும் பேசுகையில், “ஆசிய—ஆப்பிரிக்க நாடுகளின் மக்களாகிய நமது சுதந்திரத்தைப் காப்பதற்காகவும் விடுதலைக்காகவும் இதுகாறும் நாம் அனைவரும் பெருந்துன்பங்களை அனுபவித்தோம். ஏகாதிபத்தியத்தை எதிர்த்த போராட்டத்தில் நமக்குப் பொதுவான குறிக்கோள் உண்டு. நமது நாடுகளைப் புனரமைப்பதில் இதேபோல் பரஸ்பர உதவி, ஒத்துழைப்பு நல்கும் வகையில் ஒத்துழைப்போம்” என்று குறிப்பிட்டார்.

‘நாட்டு விடுதலைப்போராட்டத்தில் நாம் ஒத்துழைத்துக் கொள்வதுபோல், அதே ஒத்துழைப்பு மனோபாவம்இப்போது நடைபெறப் போகும் விளையாட்டுப் போட்டியிலும் நிலவட்டும்” என்று தெரிவித்தார்.

## இந்திய போட்டிக் குழுவிற்கு வரவேற்பு

இந்தியாவிலிருந்து இங்கு வந்துள்ள பிங்பாங் விளையாட்டு குழுவிற்கு இந்திய தூதுவராலயத்தில் ஒரு வரவேற்பு அளிக்கப்பட்டது.

தூதுவராலய அதிகாரியான டி. சி. மிஸ்ரா, எல்லோரையும் வரவேற்ருர். அவர் பேசுகையில் இந்தியக் குழுவைச் சீன வரவேற்றதானது, இரு நாடுகளுக்கிடையே படிப்படியாக வளர்ந்துவரும் நல்லுறவையே குறிக்கிறது என்ருர்.

இந்த வரவேற்புக்கு முன், சீன பிங்பாங் கழகத்தின் தலைவரான “சன்-சுன்” என்பவர், இந்திய விளையாட்டுக் குழுவின் தலைவர் ரங்கராமானுஜத்தை சந்தித்தார். உலக பிங்பாங் போட்டிகளில் கலந்துகொண்டு நல்ல அனுபவம் பெற்ற திரு. ரங்கராமனுஜம்பீகிங்கில் நடைபெறும் இந்தப்போட்டிக்குத் தம்முடைய ஆலோசனைகளைத் தரவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

# கோவை மில் முதலாளிகளுக்கு இடைக்காலத் தடை!
## நான்கு சங்கங்களின் போனஸ் போராட்டத்தின் அடுத்த கட்டம்

கோவை, நவ 2—
கோவையில் போனஸ் போராட்டம் நடந்ததும், லேபர் கமிஷனர் தலையீட்டின் பேரில் முடிந்ததும் அறிந்ததே. அதற்குப்பின் சட்ட ரீதியான நடவடிக்கைகள் பற்றி வேலை நிறுத்தம் செய்த 4 சங்கங்கள் நடவடிக்கையில் ஈடுபட்டு சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்கு நடத்த சி. ஐ. டி யூ சங்கம் ஏற்பாடு செய்துள்ளது.

1969ம்ஆண்டின் போனசின் போது கொடுக்கப்பட்ட தொகையின் ஒரு பகுதியை 1971 செப்டம்பர் மாதச் சம்பளத்திலிருந்து மில் முதலாளிகள் தொழிலாளர்களின் சம்பளத்திலிருந்துபிடிக்கத் துவங்கினுர்கள் இதற்கு உதவியாக எச். எம். எஸ்., ஐ என் டி யூ சி., டி. எம். கே. சங்கங்கள் பிடித்தம் செய்யலாம் என்பதற்கே ஒரு ஒப்பந்தமே முதலாளிகள் சங்கத்தோடு செய்து கொண்டார்கள்.

இந்த நிலைமையில் வேலை நிறுத்தம் செய்த 4 சங்கங்களான கோவை மாவட்டமில் தொழிலாளர் சங்கம், ஐடியூ, கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கம், எ ஐ டி யூ சி, ஐக்கிய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம், சோஷலிச பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் ஆகிய ஸ்தாபனங்கள் கோவையில் மாவட்டமுன்சீப் கோர்ட்டில் வழக்குப் போட்டது. வழக்கில் கோவையில் உள்ள செல்வராஜாமில், கஸ்தூரி மில், வசந்தாமில், கோத்தாரி மில் ஏ அண்டு பி, கண்ணபிரான்மில், லோட்டஸ் மில், விஜயலட்சுமி மில், பயனியர் டெக்ஸ்டைல் வேடபட்டி, சிவானந்தா மில், ராம்நாராயண மில், ஞானம்பிகாமில், கெங்கா டெக்ஸ்டைல் ஆகிய மில்களுக்கு சென்ற ஆண்டு கொடுக்கப்பட்ட தொகையை சம்பளத்திலிருந்து பிடிக்கக் கூடாது என்று இடைக்கால தடை விதித்துள்ளார்.

இந்த வழக்கில் திரு. ஜி.எம். நாதன், ஜி.நடராஜன், மருதாசலம் ஆகிய வழக்கறிஞர்கள் ஆஜரானுர்கள். இந்த விஷயம் போராடிய தொழிலாளர்களுக்கு உற்சாகத்தைக் கொடுத்துள்ளது.

# தீக்கதிர் வளர்ச்சி நிதி

சேலம், நவ. 1—
சேலம் மாவட்ட கட்சி மாநாட்டை யொட்டி 31—10—71-ந் தேதியன்று மேட்டூரில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் வி. பி சிந்தன் அவர்களிடம் மாலைக்குப் பதிலாகக் கொடுக்கப்பட்ட ரூ 12 தீக்கதிர் வளர்ச்சி நிதியாக அளிக்கப்பட்டது.

# கண்ணோட்டம்

## நவம்பர்-5!

தோழர்களே,

விழித்துக் கொள்ளுங்கள்!

இன்று, இப்பொழுது விழித்துக் கொள்ளத் தவறினால் எப்பொழுதுமே எழுந்திருக்க முடியாத அதல பாதாளத்தில் ஆழ்ந்து போக நேரிட்டாலும் நேரிடலாம்! ஆதலின், விழித்துக்கொள்ளுங்கள்.

இன்று அடிக்கப்பட்டிருக்கிற மணி நமக்கும் சேர்த்துத்தான் தோழர்களே, நமக்கும் சேர்த்துத்தான்! மேற்கு வங்கத்தின் கூரையைப் பற்றியிருக்கும் தீ நம்மையும் ஆட்கொள்ள வெகுகாலம் பிடிக்காது என்பதை உணர்வீர்; எழுவீர்!

இந்திய நாட்டுத் தொழிலாளி வர்க்கத்தின் உயிர் நாடியே மேற்கு வங்கத்தில்தான் இருக்கிறது என்பதை மறந்து விடாதீர்! இந்த நாட்டு ஜனநாயக இயக்கங்களின் ஆணிவேர் மேற்கு வங்கத்தில்தான் பலமாக வேரூன்றியிருக்கிறது என்பதை மறந்துவிடாதீர்!

உயிர்நாடி அற்றுப் போகுமானால், ஆணிவேர் இற்று வீழுமானால்— நாமெல்லாம் மூச்சடங்கிப் போக நாட்கணக்கா செல்லும்? தலையிழந்த முண்டம் சில கணமே துள்ளும்; பின்னர் என்றைக்குமே எழ முடியாத ஓய்வில் அல்லவா பள்ளி கொள்ளும்! ஆதலின் தோழர்களே, விழிப்பாயிருங்கள்! உங்கட்கும் வேளை நெருங்கி வரலாம்!

ஓ! இஃதென்ன அவலச் சுவை?

அவலச் சுவை அல்ல என்னருமைத் தோழர்களே! வருமுன் காக்கும் அறிவுடைமைக்கு ஓர் எச்சரிக்கை! இந்த எச்சரிக்கை புறக்கணிக்கப்படலாகாது என்பதால் எழுந்த கூக்குரல்!

தொழிற்சங்கத்தைக் கட்டிக் காத்ததற்கு, நிர்வாகத்தை—அரசைப் பணிந்து, அடிதொட்டு ஊழியர் நலனைப் பலி கொடுக்க மறுத்து— அவர்கள் காட்டும் ஜாடையையும் சாகசத்தையும் மதியாது— மிரட்டலுக்கும் வஞ்சனைக்கும் மசியாது போராடி வந்தார்களே, மேற்குவங்கத் தொழிலாளத் தோழர்கள் அவர்களிலே ஒரு சிலரை— அவர்களிலே நன்முத்துக்கள், போன்ற 45 பேரை— ஊழியர் சங்கத் தலைவர்களை— பிரதிநிதிகளை— செயல்முறை வீரர்களைப் பலிகொண்டுவிட்டது இந்திரா சர்க்கார்! பழி வாங்கிவிட்டது இந்திரா சர்க்கார்! வஞ்சம் தீர்த்துக் கொள்கிறது இந்திரா சர்க்கார்!

பதவி நீக்கத்திற்கான காரணம் காட்டப்பட்டதா?

இல்லை!

ஒரு விசாரணையாவது உண்டா?

இல்லை!

ஒரு நெறிமுறை கிடையாதா?

இல்லை!

தற்காத்துக் கொள்ள வாய்ப்பாவது அளிக்கப்பட்டதா?

இல்லை! இல்லை!! இல்லை!!!

பிரிட்டிஷ் நீதிமுறையின் நேரடி வாரிசாக இந்தியாவில் பரிபாலனம் செய்யப்படுகிறதாமே? அந்தப் பிரிட்டிஷ்காரன். நாயைக் கொல்வதற்குக்கூடக் காரணம் காட்டித்தானே கொல்வானாம்! தோழர்களே—இங்கோ—நம் அன்னை பாரத பூமியிலே—அன்பும் அறமும் நீதியும் நேர்மையும் செழித்தோங்கிய புண்ணிய பூமியிலே—தாய்க்குலச் சின்னம் இந்திரா காந்தி ஆளுகின்ற பொழுது—முற்போக்கு இந்திரா காந்தி ஆளுகின்ற பொழுது—சோசலிஸ இந்திரா காந்தி ஆளுகின்ற பொழுது—நேரு மகள் இந்திரா காந்தி ஆளுகின்ற பொழுது—கேவலம் நாயினும் கீழாக நம்மோடு தோளுடன் தோள் இணைய நமக்காகப் போராடிய, அந்த 45 தோழர்கள்—விலை மதிக்கவொண்ணா மணிகங்கள்— ஒரு காரணமும் காட்டப்படாமல் தூக்கியெறியப்பட்டிருக்கிறார்களே—

எண்ணுகின்ற பொழுது நெஞ்சம் கொதிக்கவில்லையா? கேட்கின்ற போழ்தே குருதி சூடேற வில்லையா? இன்னமுமா சோம்பியிருப்பது? இனியுமா வாளா இருப்பது?

இந்த முதல் அடியைத் தடுத்து நிறுத்தத் தவறுவோமாகில்—இந்தியத் தொழிலாளிவர்க்கத் தூண்போன்ற மேற்கு வங்கத் தோழர்கள் மீதுவிழுந்துள்ள இந்ததாக்குதலை முறியடிக்கத் தவறுவோமாகில்—நாமனைவரும் இந்த நாட்டு நிலப்பிரபுக்களுக்கும், பெருமுதலாளிகளுக்கும் அவர்கள் கைக்கருவியாக இயங்கும் இந்த அரசிற்கும் ஆண்டாண்டுக்காலம் தொண்டூழியம் செய்து, அவ்வப்போது விசியெறிகிற சில சில்லரைகளை 'உடலில் உயிர் ஒட்டிக் கொண்டிருக்க உதவுமே' என்று பொறுக்கிக்கொண்டிருக்க வேண்டும்!

இந்த நிலை வேண்டுமா? அல்லது கிளர்ந்தெழுந்து— இன்று வெடிக்கின்ற போராட்ட அலைகளை தொழிலாளி வர்க்கப் பெரும் போராட்டமாக- தன்னை விடுவித்துக் கொள்வதற்காக நடத்துகின்ற போராட்டமாக உருப்பெற வேண்டும் என்று விரும்புகிறீர்களா?

இதில் இரண்டிலொன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.

இன்று விழித்தால் நாளை வாழ்வுண்டு!<br>
இன்று எழுந்தால் நாளை ஏற்றமுண்டு!<br>
இன்று போராடினால் நாளை வெற்றி உறுதி!<br>
இன்று 'கம்மா' இருப்போமாகில்<br>
என்றென்றைக்கும் தாழ்வுதான்! தாழ்வுதான்!!

ஆதலின் தோழர்களே, எழுவீர், புறப்படுவீர்!<br>
போர் முரசம் ஒலித்துவிட்டது!

### நவம்பர் 5-ம் நாள்!

மேற்கு வங்கத் தோழர்கட்கு நம் ஒற்றுமையின் அறிகுறியாய நம் ஆதரவைத் தெரிவிக்கும் வண்ணம் நாமும் உடனிருக்கும் பங்கை உணர்த்தும் வகையில்—

ஆர்ப்பாட்டங்கள்— கண்டன ஊர்வலங்கள்—<br>
பொதுக்கூட்டங்கள் நடத்திடுவோம்!

தெருவின் மூலை முடுக்குகளிலெல்லாம்— மேற்கு வங்கத்தில் இந்திரா சர்க்காரின் எதேச்சாதிகாரக் கொடுமையினைக் கண்டித்திடும் தட்டிகள்— அறிக்கைகள்— என்று என்னென்ன வழிகளிலெல்லாம் உங்கள் ஆதரவை, ஒற்றுமையினை, பரிவை அவர்களுக்குத் தெரிவித்திட முடியுமோ அல்லது தந்திட முடியுமோ— அந்தந்த வழிகளிலெல்லாம் செயல்பட்டிடுவீர்!

உங்கள் செயல் வங்கத் தோழர்களை,<br>
மேலும் மேலும் ஊக்குவிக்கட்டும்!<br>
உங்கள் செயல் 'பாசிசச்' சர்க்காருக்குச்<br>
சரியான பாடமாக அமையட்டும்!<br>
உங்கள் செயல் பகை வர்க்கமனைத்திற்கும்<br>
நடுக்கத்தைத் தருவதாக அமையட்டும்!<br>
வெல்க! தொழிலாளி வர்க்கம் வெல்க!

— உறந்தைச் செம்பியன்

## பம்பாய் போராட்டம்:

# டாங்கேயின் சீர்குலைவு முழுவெற்றியைபாதித்தது

இரண்டு லட்சம் பஞ்சாலைத் தொழிலாளர்கள், ஒன்றுபட்டு உறுதியாக நின்று போராடினார்கள். அந்தப்போராட்டத்திற்குமுன், ரிசர்வ் போலீஸ் நிற்கமுடியவில்லை போலீசாரின் 144 தடை உத்தரவு செயலாற்ற முடியவில்லை. ஏன்? இந்திராகாங்கிரஸ்ஆளும் மராட்டியமாநில அரசின் சித்து வேலைகளும் எடுபடவில்லை.

### குழப்பம்

ஆறுவருடங்களாகசீர்திருத்தவாதிகளும், குழப்பவாதிகளும் பம்பாய்நகர, தொழிலாளி வர்க்கத்தை துரோகம்செய்து அவர்களுடைய நம்பிக்கையை சின்னாபின்னப்படுத்தியிருந்த போது, இந்தப்போராட்டம் ஓர் எழுச்சி மிக்கப்பேரலையாக இருந்தது.

ஆனால் முதலாளிகள், 4 சதவீதம் போனஸ்தான் தர முடியும் என்று பிடிவாதம் பிடித்ததால் ஏற்பட்ட இந்த வேலை நிறுத்தம், பம்பாயிலுள்ள 58 மில்களில் 42 மில்கள், 8.33 சதவீத போனஸ் தர ஒப்புக்கொண்ட பிறகுதான் முடிந்தது ரேடியோவும தினசரிகளும், தொழிலாளிகளை எவ்வளவுகுழப்பத்தில் ஆழ்த்த முடியுமோ, அவ்வளவும் செய்து பார்த்தனர்.

### சீர்குலைவு

இவை யெல்லாவற்றிற்கும் மகுடம் வைத்ததாக இருந்தது டாங்கேயின் நடவடிக்கை... ஏ.ஐ.டி.யூ.சி. சங்கத் தோழர்களை, எவ்வளவுதூரம் நமது சங்கத்தோடு சேர்ந்து போராட்டங்களில் கலந்து கொள்ளாமல் செய்ய முடியுமோ அவ்வளவும் செய்தார். மறைமுகமாகவும், நேரடியாகவும், நமது சங்கத்தலைவர்களை இழித்தும் பழித்தும் பேசினர்.

ஆனால், துரதிருஷ்டவசமாக அந்தத் தோழர்கள் அவருடைய சூழ்ச்சிகளுக்குப் பலியாகவில்லை. மாறாக, அவருடைய உத்தரவுகளைப் புறக்கணித்தது மட்டுமல்ல, பெருவாரியாக நமது சங்கத் தோழர்களோடு சேர்ந்தும் போராடினார்கள்,

ஏ.ஐ.டி.யூ.சி. தலைமையிலான, பம்பாய் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் நம்முடன் சேர்ந்து, செப்டம்பர் மாதம் 1-ம்தேதி அடையாள வேலை நிறுத்தம் செய்தது. பிரமிக்கத்தக்க வெற்றியடைந்த அந்தப் போராட்டத்தைப் பற்றி, ஏ.ஐ.டி.யூ.சி.யின் பொதுச்செயலாளர் என்ற முறையில் கூட ஓர் அறிக்கை வெளியிடப்படவில்லை. ஏன்? மராட்டியமாநில வலது கம்யூனிஸ்ட்கட்சிகூட, தன் ஆதரவைத் தெரிவிக்க ஓர் அறிக்கை வெளியிடவில்லை.

இந்த வெற்றி டாங்கேயிடம், புதிய பயத்தைத் தோற்றுவித்தது. தான் தெரிவித்த எதிர்ப்பு, எவ்வளவு தவறானது என்பதை அவர் ஒப்புக்கொள்ள மறுத்தார். பம்பாய்க்கு தடித்துக்கொண்டு ஓடிவந்து தன்னுடைய சங்கம் தன்னந்தனியாக, அக்டோபர் 11-ம் தேதி போராட்டம் தொடங்கும் என்று அறிவித்தார்.

### ஒன்றுபட விரும்பினோம்

நமது சங்கம், ஏற்கனவே, எல்லாச் சங்கங்களுடன் சேர்ந்து, அக்டோபர் இரண்டாம் வாரத்தில் போராடுவதாக தீர்மானித்திருந்தது. 11-ம் தேதி என்று தன்னிச்சையாக, டாங்கே அறிவித்தும் நமது சங்கம் ஏற்றுக்கொண்டது. ஒன்றுபட்ட போராட்டமாக இது அமைய வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டோம். தோழர்கள் குரானேயையும், கோல்கட்கரையும் மிகக்கேவலமாக வசைபாடியதுதான் பதிலாகக் கிடைத்தது டாங்கேயிடமிருந்து யாருடன்சேர்ந்தாலும், நமதுசங்கத்துடன் இணைந்து செயலாற்றுவது மட்டும் தவிர்க்கப்பட வேண்டும். இதுதான் டாங்கேயின் செயல்திட்டமாயிருந்தது. எந்த ஒன்றுபட்ட செயலையும் எதிர்ப்பது, சகசங்கத்தோழர்களுக்குள் குரோதத்தை உருவாக்குவது. இவை தவிர வேறெதுவும் அவர் செய்யவில்லை. இதே சந்தர்ப்பத்தில் இண்டிகேட், சிண்டிகேட், சிவசேனை, ஜனசங்கத்தோடு, இவர்கள் கூட்டுச்சேர்ந்து. பம்பாய் பஸ் தொழிலாளர் சங்கத்தை உடைத்தெறியும் முயற்சியில் ஈடுபட்டார்கள்

### முன்னணியில் நாம்

நாம் ஒன்றுபட்ட போராட்டத்திற்காக, வேண்டி விரும்பி நின்றோம். போனஸ் பிரச்சினையாக மட்டும் நிறுத்தாமல், போனஸ் சட்டத்தையே, மாற்றுவதற்காக நின்றோம். அதற்காக, எல்லா சங்கத்தையும் அழைத்து, ஒரு கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தோம். எச். எம். எஸ். வந்தது. எச். எம். பி. வந்தது ஆனால் ஏ.ஐ.டி.யூ.சி. வரவில்லை. காரணம், சி.ஐ.டி.யூ.வினால் ஏற்படுத்தப்பட்டதல்லவா? அவர்களுடைய தன்மான உணர்ச்சி இடம் கொடுக்கவில்லை.

போனஸ் பிரச்சினை, பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு மட்டுமல்ல, சகல பகுதி மக்களுக்கும் பொதுவானது. இதை அடிப்படையாகக் கொண்டு, ஒரு பரந்த வெகுஜனப்போராட்டம், நடத்த வேண்டும் என்று நாம் விரும்பினோம். அக்டோபர் 2-ம் தேதி மராட்டிய மாநிலம்பூராவிலும் போனஸ் தினம் கொண்டாடப்பட்டது. பம்பாய், மிகப் பெரிய அளவில் பேரணியை நடத்திக் காட்டியது

ஐந்து நாள் போராட்டம் தொழிலாளர்களுக்கு, உடனடியாக போனஸ் வெற்றியைக் கொடுத்தது ஆனால் போனஸ் சட்டத்தை மாற்றும் போராட்டம் தொடரவேண்டும் முதலாளிகள் சார்பில், "நாவல் டாடா" போனஸ் சட்டம் மாற்றப்படுவதை விரும்பவில்லை. அதற்குக் கைம்மாறாக, "காடில்கரின் திட்டப்படி" போனஸ் கொடுக்கத்தயாராக இருக்கிறார்.

போராட்டத்தின் அடிப்படை விரிவாக்கப்பட்டு, சகல பகுதியும், சேர்ந்த ஒன்றுபட்ட போராட்டத்தை நாம் அமைக்க விரும்புகிறோம் ஆனால், டாங்கேயின் சீர்குலைவு வேலைகளுக்கு முன்னால்...

### திட்டமிட்ட துரோகம்

மத்திய சங்கங்களின் கூட்டத்திற்கு டாங்கே வர மறுத்தார். ஒன்றுபட்ட நடவடிக்கைக்கு மறுத்தார். வேலை நிறுத்தத்தை சகல பகுதிக்கும் பரவலாக்க மறுத்தார். போனஸ் சட்டத்தை மாற்றுவது கூடாதென்றார் இந்திரா காந்தியை வரவேற்க ஆயிரக்கணக்கில் வரும்படி அழைப்புக்கு மேல் அழைப்புவிடுத்தார். இண்டிகேட் சங்கத்துடன் கூடி மகிழ்ந்தார். இவையெல்லாம், திட்டமிடப்பட்டு நடந்தேறியது. இவை அத்தனையையும்மீறி நாம்போராடினோம்; போராடுவோம். இதுதான் நம்முடைய பாதை- தொழிற்சங்க மையத்தின் பாதை- தொழிலாளி வர்க்கத்தின் பாதை!

("பீப்பிள்ஸ்டெமாகரசி"யில் வெளியான கட்டுரையின் சுருக்கம்)

## திருச்சி பீடித்தொழிலாளர் போராட்டம்

### தோழர் ஆர். உமாநாத் அறிக்கை.

திருச்சி, நவ. 3—

இந்திய தொழிற்சங்க மையத்தின் தமிழ்நாடு கிளைச் செயலாளர் தோழர் ஆர். உமாநாத் திருச்சி பீடித் தொழிலாளர் போராட்டம் குறித்து பத்திரிகைகளுக்கு அறிக்கை விடுத்துள்ளார். அதன் விவரம் வருமாறு:—

திருச்சியிலுள்ள ஆயிரக்கணக்கான பீடித் தொழிலாளர்கள் சம்பள உயர்வும் போனசும் கோரி சில தினங்களாகக் கிளர்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள்.

அரசாங்கத்தின், பணவீக்கம் பற்றாக்குறை பட்ஜெட், வரிக்கொள்கை ஆகியவற்றின் விளைவாக செங்குத்தாக விலைவாசி உயர்ந்ததால் சகல பகுதி மக்களும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

பீடித் தொழிலாளர்களைப் போன்ற முறைப்படுத்தப் படாத தொழில்துறையைச் சேர்ந்த தொழிலாளர்கள் இதனால் மிக மோசமாகப் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

எனவே, திருச்சி பீடித் தொழிலாளர்களின் போராட்டம் மிகவும் நியாயமானது அவர்களுடைய போராட்டத்துக்கு இந்தியத் தொழிற்சங்க மையத்தின் தமிழகக் குழு முழுமனதான ஆதரவளிக்கிறது.

திருச்சி மாவட்ட கலெக்டர் இந்தப்பிரச்சினையை தொழிலாளர்கள் பிரதிநிதிகள் பீடி முதலாளிகள் கொண்ட கூட்டத்தை 8—11—71-ல் கூட்டி சமாதானமாகப் பேசித்தீர்த்துக்கொள்ளலாம் என்று உறுதியளித்ததற்கிணங்க, திருச்சி மாவட்ட பீடித் தொழிலாளர் சங்கம் தன்னுடைய கிளர்ச்சியைத் தற்காலிகமாக ஒத்தி வைத்திருக்கிறது.

தொழிலாளர்களின் பக்கத்திலிருந்து கொடுக்கப்பட்டிருக்கும் இந்த சமிக்ஞையை- பீடித் தொழிலாளர்களின் நியாயமான சம்பள உயர்வு போனஸ் கோரிக்கைகளை வழங்க பீடி முதலாளிகள் இணங்குவதற்கு அவர்களை வற்புறுத்த பயன்படுத்தி கோரிக்கைகள் கிடைக்கச் செய்யுமாறு செய்வது கலெக்டரின் பொறுப்பாகும்.

திருச்சியிலுள்ள பீடித் தொழிலாளர்கள் இந்தத் தருணத்தில் அவர்களிடையே பிணக்கும் ஏற்படாமல் உறுதியாகவும் ஒன்றுபட்டும் நிற்குமாறு இந்திய தொழிற்சங்க மையத்தின் தமிழகக் குழு அறைகூவல் விடுகிறது

ஒற்றுமையோடிருந்தால்தான் கலெக்டர் முன்னிலையில் பேச்சுவார்த்தை நடக்கும்போது முதலாளிகளுக்கு அதிகப்படியான நிர்ப்பந்தம் கொடுப்பதற்கும் அதே போல பேச்சுவார்த்தை தோல்வியடைந்தால் நேரடி நடவடிக்கையில் ஈடுபடுவதற்கும் உதவிகரமாக இருக்கும்.

# இங்கே பணக்காரர்களுக்கு உள்ள வசதிகள்! அங்கே உலக பாட்டாளிகளுக்கும் கிடைக்கிறது

## கம்யூனிஸ்ட் வடகொரியாவில் வெள்ளம்போல் சரக்குப் பெருக்கம்

ஹாங்காங், நவ. 2—

செல்வச்செழிப்புள்ள பணக்காரக் குடும்பங்களுக்கு இங்கு கிடைக்கும் வசதிகள் அனைத்தும், கம்யூனிஸ்ட் அரசு ஆட்சி புரியும் வடகொரியாவில், விவசாயிகள். தொழிலாளர்கள் அரசு ஊழியர்கள் ஆகிய அனைத்துப் பகுதி மக்களுக்கும் கிடைக்கின்றன.

### வெள்ளம்போல்

ஆடம்பரப் பொருள்கள் எனப்படும் அனைத்தும் அங்கு அத்தியாவசியப் பொருள்களாகி விட்டன. அங்கு சோஷலிசத்திட்டங்கள் பிரமாத வெற்றிகளை அடைந்திருக்கின்றன. மக்களின் தேவைப் பொருள்கள் வெள்ளம்போல் உற்பத்தி செய்யப்பட்டுள்ளன எல்லா வீடுகளின் சமையல் அறைகளிலும் தேவைப்படும் சாமான்கள் அனைத்தும்நிறைந்துள்ளன.

### நாகரீகத்தேவை

டெலிவிஷன் செட்டுகள், குளிர்பதன பெட்டிகள், ரேடியோக்கள், கடிகாரங்கள், கைக்கெடிகாரங்கள் ஆகியவை எல்லா வீடுகளிலும் உண்டு. மற்றும், சமையலறைக்குத் தேவையான மின்சார அடுப்புகள், வாஷிங் மெஷின்கள், எவர்சில்வர்சமையல்பாத்திரங்கள், மற்றும் பலவித சமான்களும் உள்ளன

மக்களிடம் பணப்புழக்கம் அதிகமாக இருப்பதாலும், தேவைப்பண்டங்களின் உற்பத்தியும் அபரிமிதமாக இருப்பதினாலும்—மக்கள் விரும்புகின்ற தேவைப் பொருள்கள் அனைத்தும், பற்றாக்குறை என்பது இல்லாமல்—தங்கு தடையின்றிக் கிடைக்கின்றது.

### நிர்ணயவிலை

நாட்டின் எல்லா ஊர்களிலும் ஸ்டோர்களும், சூப்பர் மார்க்கெட்டுகளும் தோன்றிய வண்ணமிருக்கின்றன சோஷலிஸ்ட் வர்த்தகம் எவ்வளவு சிறப்புடையது என்பதை இங்கே காணமுடிகிறது.

எல்லா ஊர்களிலும் ஒரே மாதிரி சாமான்களுக்கு நிர்ணயமான ஒரே விலை! கேட்ட சாமான்களை காலதாமதமின்றி உடனே கிடைப்பதற்கான முறையில் திறமையான விநியோகம்!

மேற்கண்டவாறு ஹாங்காங் நகரிலிருந்து "இந்து" பத்திரிகையின் சிறப்பு நிருபர் எழுதியுள்ளார்.

## விஜயவாடாவில் மாணவர்கள் வேலை நிறுத்தம்

விஜயவாடா, நவ. 2—

இங்கு கல்லூரி மாணவர்கள், தங்களின் நியாயமான கோரிக்கைகளுக்காக, காலவரையற்ற வேலை நிறுத்தம் தொடங்கியுள்ளனர்.

ஃ நன்கொடை வசூலிக்கும் கல்லூரிகளுக்கு பல்கலைக் கழகம், அங்கீகாரத்தை ரத்து செய்ய வேண்டும்.

ஃ பொருளாதாரம், சரித்திரம் போன்ற கலைப் பாடங்கள் பயிலும் மாணவர்களுக்கு, தற்போது, பொதுவிஞ்ஞானப் பாடம் பயிற்றுவிக்கப்படுகிறது.

விஞ்ஞானப் பாடம் பயிலும் மாணவர்களுக்கு கணிதம் பயிற்றுவிக்கப்படுகிறது. இவை இரண்டும் பட்டம் படிக்கும் மாணவர்களுக்குத் தேவையில்லாதவை. எனவே இவற்றை நீக்கவேண்டும்.

(இம்முறை மதுரை, சென்னைப் பல்கலைக் கழகங்களில் நீக்கப்பட்டு விட்டது)

ஒவ்வொரு கல்வியாண்டு முடிவிலும், இடைக்காலப் பட்டப்படிப்பு, பட்டப் படிப்பு மாணவர்களுக்கு பல்கலைக் கழகமே தேர்வு நடத்த வேண்டும் என்ற இந்த நியாயமான கோரிக்கைகளை, அரசும், ஆந்திரம், வெங்கடேஷ்வரா பல்கலைக் கழகங்களும் ஏற்கவேண்டும் என்று கோரி தொடர்ந்து வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர்.

மாணவர்கள் பிரும்மாண்டமான ஊர்வலம் ஒன்றையும் நடத்தினர்.

## பரம்பிக்குளம்—ஆழியார் திட்ட

# தலைமை பொறிஞரின் தன்னிச்சைப்போக்கு!

## தொழிலாளர்களின் கண்டன ஊர்வலம்

சோலையார் நகர், நவ. 2—

பரம்பிகுளம்ஆழியார் திட்ட பொதுப்பணித்துறைத் தொழிலாளர்கள், தலைமைப் பொறிஞரின் தன்னிச்சைப் போக்கை எதிர்த்து கண்டன ஊர்வலம் நடத்தினர்.

கடந்த 15—3—71 அன்று சோலையார் நகர் பொதுப் பணித்துறைத் தொழிலாளர் சங்கத்தின்(சி.ஐ.டி.யூ.) துணைத் தலைவர் தோழர் வி.கே. பால்ராஜ் தலைமையில் தொழிலாளர்கள் ஊர்வலமாகச் சென்று தலைமைப் பொறிஞரைச் சந்தித்தபோது தினக்கூலித் தொழிலாளர்களை மாத ஊதியத் தொழிலாளர்களாக்கி மாற்றுவதாக ஒப்புக்கொண்டார். அந்தப் பேச்சுவார்த்தையின் போது, மேற்பார்வைப் பொறிஞரும் நிர்வாகப் பொறிஞர்களும் உடனிருந்தனர்.

### முன்னுக்குப் பின் முரணான நிலை

ஆனால். இப்பொழுதோ, தினக்கூலித் தொழிலாளர்களாகவே மாற்றி உத்தரவு கொடுக்கப்பட்டுள்ளது. இதற்கு எதிர்ப்புத் தெரிவித்து தொழிலாளர்கள், மாறிச் செல்ல மறுக்கிறார்கள்.

தலைமைப் பொறிஞரின்இந்த முன்னுக்குப்பின் முரணான நிலையை எதிர்த்தும்- தன்னிச்சைப் போக்கை எதிர்த்தும் அக். 25-ஆம் நாள் தொழிலாளர்கள் அனைவரும் கண்டன ஊர்வலம் நடத்தினர். ஊர்வலத்திற்கு, சோலையார்நகர் பொதுப்பணித்துறைத்தொழிலாளர் சங்கச் (சி.ஐ.டி.யூ.) செயலாளர் தோழர் ஆர். நாராயணன் தலைமை வகித்தார்.

### மறியல் செய்ய முடிவு

பேச்சுவார்த்தையில் ஒப்புக்கொண்டபடி, தினக்கூலித் தொழிலாளர்களை மாத ஊதியத் தொழிலாளர்களாக மாற்றுவிட்டால் ஆர்ப்பாட்ட ஊர்வலங்களும், மறியலும் செய்ய தொழிலாளர்கள் முடிவுசெய்துள்ளனர். (ந. நி.)

## விருதை சவரத் தொழிலாளர்க்கு கோவில்பட்டி தொழிலாளர் ஆதரவு

கோவில்பட்டி, நவ. 2—

எந்த நகராட்சியிலும் இல்லாத முறையில் விருதை நகராட்சி, சவரத் தொழிலை லைசென்ஸ் எடுத்துதான் நடத்த வேண்டும் என்ற விநோதமான முடிவு எடுத்துள்ளது.

இதை எதிர்த்து விருதை சவரத் தொழிலாளர்கள் அக். 21 முதல் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர்.

இப்போராட்டத்திற்கு தன் முழு ஆதரவையும் தருவதாக கோவில்பட்டி ஐக்கிய சவரத் தொழிலாளர் சங்கத் தலைவர் திரு சேதுராசன் அறிவிக்கிறார்.

தமிழகமெங்குமுள்ள, சவரத் தொழிலாளர்கள், இப்போராட்டத்திற்கு தங்கள் ஆதரவை நல்குமாறு, கோவில்பட்டி சவரத் தொழிலாளர் சங்கம் கேட்டுக் கொள்கிறது.

## தீக்கதிர் வளர்ச்சி நிதி

மேலூர் தாலுகா கீழையூர் கட்சி உறுப்பினர் தோழர். ம. மந்தைவீரன் குமாரத்தி செல்வி அழகம்மாளுக்கும், ரெங்கசாமிக்கும் 31—10—71 தேதியில் நடந்த திருமண விழாவில் தீக்கதிர் வளர்ச்சி நிதிக்கு ரூ. 5 அன்பளிப்பு கொடுக்கப்பட்டது. —நன்றி.

# பிளேக்நோயைத் தடுப்பதாக கூறி அதிகாரிகள் ஊர் சுற்றுகிறார்கள்

## திருப்பூரில் மருந்தில்லை! பாதுகாப்பு உதவி இல்லை!!

திருப்பூர். நவ. 2—

திருப்பூரில் பிளேக் நோய் ஏற்பட்டு 10 நாட்கள் ஆகிவிட்டன. இதுவரையிலும் 46 எலிகள் இறந்து விழுந்ததாக பத்திரிகை தகவலும், சம்பந்தப்பட்ட அதிகாரிகளும் அறிவிக்கிறார்கள். ஆனால் இங்கே இருக்கக்கூடிய பொது மக்களுக்குத் தடுப்பு ஊசி போடுவதாகவும், ஆகவே பொதுமக்கள் எல்லோரும் சுகாதார அதிகாரியுடன் ஒத்துழைக்கவேண்டுமென்றும் தண்டோரா, நோட்டீஸ்மூலம் அறிவித்துள்ளார்கள். இந்தத் தடுப்பு ஊசி போடுவதற்கு நிறையப்பேர் வந்துகொண்டு இருக்கிறார்கள். ஆனால் இன்று வரை மருந்து வந்ததாக தகவலில்லை போர்டு மூலமாக மருந்து இல்லையென்ற விளம்பரத்தையும் செய்கிறார்கள் சம்பந்தப்பட்ட அதிகாரிகளும் மற்றுமுள்ள ஊழியர்களும் இங்குள்ள 200 பேர்களுக்கு மேலாக வேன்களிலும் ஜீப்புகளிலும் சுற்றி வருகிறார்கள்.

எம்.எல்.ஏ.யும், நகரந்தந்தையும் திருப்பூர் நகரத்தை சர்க்கார் செலவில் சுற்றி வருகிறார்கள். மருந்துக்கு வேண்டிய முயற்சிகள் எடுப்பதாகத் தெரியவில்லை பொதுமக்கள் மிகவும் பீதியான நிலையில் நிறையப் பேர் ஊசி போடும் இடத்திற்கு வந்து, மருந்து இல்லை என்ற போர்டைப் பார்த்து ஏமாற்றத்துடன் செல்கிறார்கள். இந்த நிலை நீடிக்காமல் உடனடியாக தடுப்பு நடவடிக்கையில் ஜரூராக ஈடுபடும் படியும் மக்களின் உயிர் மேல் விளையாட வேண்டாமென்றும் கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) பல்லடம் தாலுகா குழுவின் செயலாளர் தோழர் கே. எஸ். கருப்பசாமி ஓர் அறிக்கை விடுத்துள்ளார்.

## செம்மலர் ஏஜண்ட் தோழர்கள் உடனடி கவனத்திற்கு

தோழர்களே!

செப்டம்பர், அக்டோபர்மாத பில் தொகையை அனுப்பிவைக்காத ஏஜண்ட் தோழர்களுக்கு நவம்பர் இதழ் கண்டிப்பாக நிறுத்தப்படும்.

ஆகவே, பாக்கித் தொகையை உடனடியாக 6—11—71-க்குள் அனுப்பி வைத்து, நவம்பர் இதழை உறுதிப்படுத்திக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

நிர்வாகி,<br>
செம்மலர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்கு சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் — கே. முத்தையா